உ
சிவமயம்



தமிழ்க்கடல், சிவமணி, சிவம்பெருக்கும் சீலர்,

வண்கவி வள்ளல்

# ராய. சொ. நினைவு மலர்







## அறுபத்து ஆறாம் ஆண்டறிக்கை

# இந்து மதாபிமான சங்கம்

சிவன் கோவில் மேலை வீதி,

காரைக்குடி.

நிறுவியது : 1917 பதிவு எண். S. 11/64

ருத்ரோத்காரி – தை 8 (22—1—84)

# தமிழ்க்கடல் இராய. சொ.

## மலர் வணக்கம்

இன்தமிழ்க் கடலென இலங்குவாய் போற்றி
தென்தமிழ்க் கலையெலாம் தேர்ந்தாய் போற்றி
வண்கவி வள்ளலாய் வயங்குவாய் போற்றி
கண்ணெனச் சிவநெறி காப்பாய் போற்றி
சிவநெறி பெருக்கும் சீலரே போற்றி
சிவமணி எனவரும் செல்வரே போற்றி
காந்தியைக் கடவுளாய்க் கண்டாய் போற்றி
வாசகத் துட்பொருள் வழங்கினாய் போற்றி
தேவாரச் சுவையெலாம் தேர்ந்தாய் போற்றி
ஆழ்வார் அமுதம் அருந்தினாய் போற்றி
ஈசான சிவகுருவுக் கினியாய் போற்றி
உமையாள் கணவனாய் உயர்ந்தாய் போற்றி
கம்பன் சுவைநயங் கண்டாய் போற்றி
வில்லியின் கவிநயம் விளம்புவாய் போற்றி
சிவனவன் சேவடி சேர்ந்தாய் போற்றி
இராயசொக் கலிங்கரே போற்றி போற்றி

புலவர். நா. மீனவன்.

30-4




இந்து மதாபிமான சங்கத்தார்

## இராய. சொக்கலிங்கனாருக்கு

தமிழ்க்கடல் பட்டம் வழங்கி பொன்னாடை போர்த்தியபோது

மகிழ்ச்சியுடன் தமிழ்க்கடல் ராய. சொ.

*நாள் : 31—10—1958*

ஓம்

சிவமணி, சிவம் பெருக்கும் சீலர், வண்கவி வள்ளல்

## தமிழ்க்கடல் இராய. சொ.

*அற்புதம்ஆர் திருமுறைத்தேன் ஆழி மூழ்கி,*
*ஆழ்வார்கள் பாசுரத்து இன் அமுதம் உண்டு,*
*பற்பலவாம் திருத்தலங்கள் பரவிப் போற்றி,*
*பரமன்அடிக்கு அன்புசெயும் பணிகள் பூண்டு,*
*சற்குருவாம் ஈசானச் சான்றோன் காட்டத்*
*தனித்ததிரு ஐந்தெழுத்தின் சாரம் கொண்டு,*
*பொற்புஅமைந்த சிவபூசைப் புனிதன் ஆகிப்*
*புண்ணியம்சேர்சிவமணியாய்ப்பொலிந்துநின்றாய்!*

— கவிஞர் கோ. பூ. அமிர்தலிங்கன்.



# முன்னுரை

சங்கத் தலைவர்
**அபிசீனியா பழ. நாச்சியப்பன்**

தமிழ்க்கடல், சிவமணி, இராய. சொ. அவர்களின் மணிவிழா இந்துமதாபிமான சங்கத்தின் சார்பில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. அச்சமயம் இராய. சொ. மணிவிழா மலர் வெளியிடுவது என முடிவு செய்து அமரர், கம்பன் அடிப்பொடி, சா. கணேசன் அவர்கள் தலைமையில் மலர்க்குழு ஒன்று நியமிக்கப்பெற்றது. அக்குழு செயல்படவுமில்லை. மலர் வெளியிடவுமில்லை. அதன் காரணமாக இராய. சொ. அவர்கள் மன வேதனைப்பட்டார்கள். நான் அன்போடு பல முறை வேண்டிக்கொண்டதன் பேரில் அன்னாரின் நாட்குறிப்பிலிருந்து அவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை, இராய. சொ. அவர்களின் இனிய நண்பர் ரா. பத்மநாபன் அவர்களைக் கொண்டு தொகுக்கச் செய்து 2—10—1974ல் "இராய. சொ. வாழ்க்கைக் குறிப்புகள்" என்னும் சிறிய நூலை இராய. சொ. நட்பின் காணிக்கையாக வெளியீடு செய்தேன். அதுவும் இம்மலரில் வெளிடப்பட்டுள்ளது.

இராய. சொ. அவர்களின் திருவுருவச் சிலை திறப்பு விழாவை முன்னிட்டு இராய. சொ. நினைவு மலர், இந்து மதாபிமான சங்கத்தாரால் வெளியிடப்படுகிறது. இம்மலரில் ஆதீனகர்த்தர்களும், சான்றோர்களும், அறிஞர்களும் கவிஞர்களும் புலவர்களும், வாழ்த்துச் செய்திகள், கட்டுரை கவிதைகள் ஆகியவற்றை வழங்கி இம்மலரை வாசமுள்ள மலர்களால்

தொகுத்த வண்ண மாலையாக்கி இருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்கும் பணிவன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்மலரை அன்பர்கள் அனைவரும் படித்து, தமிழ்க்கடல் இராய. சொ. அவர்களின் வாழ்க்கைச் சிறப்புகளைத் தெரிந்து கொண்டு அமரரான இராய. சொ. அவர்கட்கு அஞ்சலி செலுத்த வேண்டுகிறேன்.

அன்புள்ள,

காரைக்குடி
*22—1—1984*



# நன்றியுரை

சங்கச் செயலர்

**அரு. ராம. முத்துராமன்**

தமிழ்க்கடல், சிவமணி, இராய. சொ. அவர்கள் அமரரான பின்பு, அன்னாரின் நினைவு நாளை ஆண்டுதோறும் சங்கத்தில் விழாவாகக் கொண்டாடும்படி ரூ 3500/- இராயவரம் ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் அவர்களால் வைப்பு நிதியாகக் கொடுக்கப்பெற்று அதன்படி சங்கத்தார் ஆண்டு தோறும் இராய. சொ. நினைவு நாளைக் கொண்டாடி வருகிறார்கள்.

14—3—1976ல் இராய. சொ. நினைவுக் குழு ஒன்று சங்கத்தின் சார்பில் நியமிக்கப்பெற்று இராய. சொ. அவர்களின் திருவுருவச் சிலை ஒன்று வைப்பதென முடிவு செய்யப்பெற்றது. திருவுருவச் சிலையை வடித்துத் தரவும், சிலையை நிறுவ உண்டாகும் கட்டுமானச் செலவை ஏற்கவும், காரைக்குடி, திரு. சா. நா. அ. சொ. அண்ணாமலை செட்டியார் அவர்கள், கோட்டையூர், திரு அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள், இராயவரம், திரு. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் அவர்கள் ஆகிய மூவரும் அன்புடன் இசைந்தார்கள்.

திருவுருவச்சிலை திறப்பு விழாவை நடத்தி வைக்க சங்கத்தார் ஒப்புக்கொண்டனர். மேற்கண்ட நன்கொடையாளர் மூவரும், தமிழ்க்கடல் இராய. சொ. அவர்களுடன் நெருங்கிப் பழகி

அன்னாரின் நன்மதிப்பைப்பெற்ற இனிய நண்பர்கள். அத்துடன் இராய. சொ. அவர்கள் கட்டளையிட்ட நற்பணிகளுக்கெல்லாம் வாரி வழங்கிய வள்ளல்கள். இம்மூவரும் இராய. சொ. அவர்களின் திருவுருவச் சிலையை நிறுவ முக்கிய காரணர்களாய் இருந்தமை குறித்து இம்மூவருக்கும் சங்கச் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

சிலையை நிறுவ சங்கத்துக்கு முன்பாக உள்ள ஊருணியின் கரைப்பகுதியில் 20 × 20 சதுர நிலத்தை விலையில்லாது சங்கத்திற்கு இலவசமாக அளித்த தமிழக அரசுக்கும், அதற்கு உறுதுணையாய் இருந்த அதிகாரிகளுக்கும் சங்கச் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இராய. சொ. நினைவு மலருக்கு வாழ்த்துரை வழங்கிய ஆதீனகர்த்தர்கள், சான்றோர்கள், கவிதை கட்டுரை ஆகியவற்றை வழங்கிய அறிஞர் பெருமக்கள் ஆகியோருக்கும் மலர் வெளியிட விளம்பரத்தின் மூலம் பொருளுதவி செய்த நிறுவனங்களுக்கும், நண்பர்கட்கும், விழாவுக்கென நன்கொடை வழங்கிய அன்பர்கட்கும் சங்கச்சார்பில் மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இம்மலரை அழகுற அச்சிட்டுத்தந்த திருமகள் அச்சக நிருவாகி திரு. நா. பழனியப்பன் அவர்களையும், அச்சகத் தொழிலாளர்களையும் மனமாரப் பாராட்டுகிறேன்.

அன்புள்ள,

காரைக்குடி
22 — 1 — 1984

**அரு. ராம. முத்துராமன்**
செயலர்

உ
சிவமயம்



'தமிழ்க்கடல்', 'சிவமணி', 'சிவம்பெருக்கும் சீலர்'

# ராய. சொ.

## வாழ்க்கைக் குறிப்புகள்

மகாத்மா காந்தியடிகளின் நூற்றாண்டு விழாவின் போது, அன்னாரைத் தெய்வமெனப் போற்றிப் பரவிய, 'தமிழ்க்கடல்', 'சிவமணி', 'சிவம்பெருக்கும் சீலர்' ராய. சொக்கலிங்கனாரின் வாழ்க்கைக் குறிப்புகள் கொண்ட ஒரு சிறு தொகுப்பு வெளி வருவது சாலப்பொருத்தம் தானே.

### பிறப்பு, கல்வி, திருமணம்

'தமிழ்க்கடல்', ராய. சொக்கலிங்கனார் காரைக்குடியில் விளம்பி ஆண்டு, ஐப்பசித் திங்கள் 15-ஆம் நாள் (30-10-1898) ஞாயிற்றுக்கிழமை, பரணி நட்சத்திரத்தில், நாட்டுக்கோட்டை, தனவணிக குடும்பத்தில், தலைமகனாகப் பிறந்தார். தந்தையார் திரு. ராய. சொ. ராயப்பச் செட்டியார். தாயார் அழகம்மை ஆச்சி.

'ராய. சொ.' அவர்கள் இளமையில் காரைக்குடியில் 'ஆசிரியர் சுப்பையா' அவர்களிடம் திண்ணைப் பள்ளியில் கல்வி பயின்றார். அவரது தந்தையாருக்கு மலையாளத்தில் உள்ள பாலக்காடு என்னும் ஊரில் ஒரு லேவாதேவிக் கடை இருந்தது. அதன் காரணமாக, எட்டு - ஒன்பது வயதுவரையில் பாலக்காட்டில் படிக்க நேர்ந்தது. பதின்மூன்றாவது வயதில் பர்மா சென்றார்.

அங்கு பியாப்பம் என்ற ஊரில் மூன்றரை வருடம் இருந்துவிட்டுத் தாயகம் திரும்பினர்.

காரைக்குடியில் தமது பதினெட்டாவது வயது முதல் இருபதாவது வயதுவரையில் தமிழ் ஆசிரியர், பண்டித திரு. சிதம்பர அய்யர் அவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியப் பாடங்கள் பயின்றார். அப்பெரியாரை நன்றியறிவோடு நினைந்து அஞ்சலித்து மகிழ ராய. சொ. ஒருபோதும் மறந்ததில்லை.

காளயுக்தி ஆண்டு, ஆனித் திங்கள் 8-ஆம் நாள் (21—6—1918) பள்ளத்தூரில் திருமதி உமையாள் ஆச்சியை, ராய. சொ. அவர்கள் திருமணம் புரிந்து கொண்டார். சுமார் 43 ஆண்டுகள் இல்வாழ்வில் கழித்தார்.

## சமூகத் தொண்டு

தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சி நடக்கையில், ராய. சொ. அவர்களுக்கு, அப்போது 'சமூகச் சீர்திருத்தத் தந்தை' என அழைக்கப்பட்ட திரு. சொ. முருகப்பாவின் தொடர்பு ஏற்பட்டது. அன்னார் காரைக்குடியில் பிங்கள ஆண்டு ஆவணித் திங்கள் 26-ஆம் நாள் (10—9—1917) பல அன்பர்களைச் சேர்த்துக் கொண்டு இந்து மதாபிமான சங்கத்தைத் தோற்றுவித்தார். இச் சங்கம் கண்டதில் ராய. சொ. பெரும் பங்குகொண்டார். மகாகவி பாரதியார் நேரில் வந்து, வாழ்த்துக் கவி பாடிப் பெருமைப்படுத்திய இச்சங்கத்தின் தலைவராக ராய. சொ. பல ஆண்டுகள் பணிபுரிந்து, இன்றும் அதன் தலைவராகத் திகழ்கிறார். பாரதியாருடன் நெருங்கிப் பழகும் பேறடைந்தவர். இந்து மதாபிமான சங்கம் கண்ட ராய. சொ. அவர்கள் அதன் பொன் விழாவைச் சீரும் சிறப்புமாகக் கொண்டாடி மகிழ்ந்தார். ராய. சொ. உமையாள் மண்டபம் என்ற பெயரால் சங்கத்தின் கட்டிடத்தில் மேல்மாடி ஒன்று கட்டிக்கொடுத்தார்.

தமிழ்கூறும் நல்உலகமெங்கும் வைத்துப் போற்றப்படும் பாரதியாரின் திருவுருவப்படம். அன்னார் காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்துக்கு வந்திருந்தபோது எடுத்த போட்டோ வினின்றும் தனியாக ஆக்கப்பட்டதே. அதோடு ராய. சொ.



தமிழ்க்கடல், சிவமணி, சிவம்பெருக்கும் சீலர், வண்கவி வள்ளல்

ராய. சொ. - உமையாள் தம்பதிகள்

அவர்களும் ஏனைய சிலரும் பாரதியுடன் கூட அப்போட்டோவில் இருப்பது பல தடவைகள், பல பத்திரிகைகளிலும் வெளிவந்து உள்ளன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

தனவணிக - சமூகத்தில் வளர்ந்த குறைபாடுகளைச் சீர்திருத்தம் செய்யக்கருதி, சித்தார்த்தி ஆண்டு, ஆவணித் திங்கள் 26 - ஆம் நாள் (*11 — 9 — 1919*) பல அன்பர்கள் 'தனவைசிய ஊழியர் சங்கம்' கண்டனர். இதிலும் ராய. சொ. அவர்களுக்குப் பெரிதும் பங்கு உண்டு.

### பத்திரிகைத் தொண்டு

தனவைசிய ஊழியர் சங்கத்தின் சார்பில் ரௌத்திரி ஆண்டு, ஆவணித் திங்கள் 24 - ஆம் நாள் (*8 – 9 — 1920*) 'தனவைசிய ஊழியன்' என்ற பெயரோடு ஒரு பத்திரிகை ஆரம்பிக்கப் பெற்றது. இதன் ஆரம்பகால ஆசிரியராக, அன்பர் சொ. முருகப்பா அவர்கள் பதின்மூன்று திங்கள் பணியாற்றினர். இப்பத்திரிகையின் இரண்டாவது ஆண்டு ஆரம்பத்திலிருந்து ராய. சொ. அவர்கள் இதன் ஆசிரியராகப் பொறுப்பேற்றுர்.

சில ஆண்டுகளுக்குப்பின் இப்பத்திரிகையை "ஊழியன்" என்ற பெயருடன் மாற்றியமைத்து, கொள்கையைப் பரந்த அளவில் விரிவுபடுத்தி, காங்கிரஸ் கொள்கை வழிநின்று இருபது ஆண்டுகள் ராய. சொ. நடத்தினுர். இப்பத்திரிகை காரைக்குடியிலும் சென்னையிலும் வெளிவந்தது.

இன்றைய பத்திரிகை உலகில் முன்னணியில் உள்ளவர்கள் பலர், "ஊழியன்" பத்திரிகையில் உதவி ஆசிரியர்களாக இருந்தவர். "வ. ரா", "தி.ஜ.ர", "புதுமைப்பித்தன்" முதலியோர் அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள். கொத்தமங்கலம் சுப்பு "ஊழியன்" தொண்டில் பங்குபெற்றிருக்கிருர். "ஊழியன்" பத்திரிகைக்குச் சென்னையின் விளம்பர ஏஜண்டாக அன்பர் எஸ். எஸ் வாசன் பணிபுரிந்தார்.

### அரசியல், காந்திப்பற்று, சிறை வாழ்வு.

ராய. சொ. வின், அரசியல் குரு திரு. வி. க எனலாம். அவருடைய பேச்சு, எழுத்து எல்லாமே திரு. வி. க. அவர்களைப் பின்பற்றியதாக இருக்கும்.

வ. வே. சு. அய்யர், வ. உ. சி, சுப்பிரமணிய சிவா முதலியோரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பினைப் பெற்றவர் ராய. சொ.

நாட்டின் விடுதலை அறப்பணிகளில் காந்தியடிகள் காட்டிய நெறியில் மிகுந்த ஈடுபாடுகொண்ட ராய. சொ. சட்ட மறுப்பு இயக்கத்தில் சேர்ந்து *9—1—1932* அன்று ஓர் ஆண்டுச் சிறைத் தண்டனை அடைந்தார். நாட்டுக்கோட்டை நகரத்தார் வகுப்பில் அரசியல் காரணமாக முதன் முதலாகச் சிறை சென்றவர் ராய. சொ. தான்.

ராய. சொ. மாசற்ற தேசபக்தர். தீவிரகாந்தீயவாதி மௌலானு முகமதலி தலைமைவகித்த காகிநாடாக் காங்கிரசுக்கும், காந்தியடிகள் தலைமைவகித்த பெல்காம் காங்கிரசுக்கும், ராஜன்பாபு தலைமைவகித்த பம்பாய்க் காங்கிரசுக்கும், ராய. சொ. பிரதிநிதியாகச் சென்றுவந்தார். அகில இந்தியக் காங்கிரஸ்க் கமிட்டி அங்கத்தினராகவும், தமிழ்நாடு காங்கிரஸ்க் கமிட்டி செயற்குழு அங்கத்தினராகவும், காரைக்குடி மாவட்டக் காங்கிரஸ் கமிட்டித் தலைவராகவும் இருந்திருக்கிறுர்.

**காந்திக்கு விருந்து**

*1934*-ஆம் ஆண்டு மகாத்மா காந்தியடிகள் தென்னுட்டில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது, ராய. சொ. அவர்களின்குடிலுக்கு வந்து, விருந்துண்டு பெருமைப்படுத்தினுர். இதனுல் தமக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிப் பெருக்கையும், பேற்றையும் ராய சொ. அவர்கள் " நாமார்க்கும் குடி அல்லோம் " என்ற தமது நூலில் குறிப்பிடுகிறுர்.

"காந்தியடிகளை விருந்தினராகப் பெறும் பேற்றை நான் பெற்றேன். என் உள்ளக் கமலத்தே இடம் பெற்ற அத்திருப்பாத தூளி என்சிறு குடிலையும் புனிதமாக்கியது.

'எம்மை ஆளுடை நாயகன்
விருந்தினுக்கு இசைந்தான்'

என்று என் உள்ளம் இன்பக்கடலாடியது. இன்னேரன்ன நிகழ்ச்சிகள் இறவாதவை ; காலாவதி இல்லாதவை"

**நகரசபைத் தலைமையும் தொண்டும்.**

1938 முதல் 1941 வரையில் காரைக்குடி நகரசபைத் தலைவராகப்பணியாற்றினார், ராய. சொ. அவர் தலைமை ஏற்கையில் நான்கே நான்கு ஆரம்பப்பள்ளிகள் தான் காரைக்குடியில் இருந்தன அவர் பதவியிலிருந்த காலத்தில் ஆரம்பப் பள்ளிகள் 17 ஆகப் பல்கின. ஊரினை அழகுபடுத்துவதில் முதன்மையான தெரு விளக்குப்போடும் திட்டம் நன்கு செயல்படுத்தப்பட்டது. வீதி தோறும் நீலரச விளக்குகள் அமைக்கப்பட்டன. 'காந்தி மாளிகை' என்னும் நகர சபையின் பெரும் அலுவலகம் அப்போது கட்டப்பெற்றதே.

**வெளிநாட்டுப் பயணம்:**

1930-ஆம் ஆண்டு மலேயாவில் சுற்றுப் பிரயாணமும், 1935, 1936-ஆம் ஆண்டுகளில் தமது மனைவி உமையாள் ஆச்சி யுடன் பர்மா, மலேயா, சிலோன், சுமத்திரா, இந்தோசைனா முதலிய நாடுகளில் சுற்றுப்பிரயாணமும் செய்துள்ளார். அப்போதெல்லாம் தமிழ் பரப்பும் நற்றொண்டையும் விடாது செய்து வந்துள்ளார்.

1961இல் மீண்டும் பர்மா சென்று, தைப்பூசம் கண்டு களித்து இருபது நாட்கள் தங்கி இலக்கியப் பணிபுரிந்தார். ராய.சொ. அவர்கள் 1963-ஆம் ஆண்டு கோலாலம்பூரில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகாநாட்டிற்குத் தலைமை தாங்கவும், சிறப்புச் சொற்பொழிவுகள் ஆற்றவும் அழைக்கப்பட்டு மலேயா சென்றார். 24 நாட்கள் ஓய்வு ஒழிவின்றி அந்நாடு முழுவதும் சுற்றி 22 இலக்கிய சமயச் சொற்பொழிவுகள் ஆற்றினார்.

**பட்டங்கள்**

1958-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31-ம் தேதி, காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தார் தமது அருமைத் தலைவர், ராய. சொ. அவர்களின் மணி விழாவினை மிக்கச்சிறப்பாகக் கொண்டாடினர். அவ்வமயம் ராய. சொ. அவர்களின் ஆழ்ந்தகன்ற தமிழறிவையும், தொண்டினையும் பாராட்டு முகத்தான் அவர்கட்குப் பொன்னாடை போர்த்தி, '**தமிழ்க்கடல்**' என்ற பட்டமும் சூட்டி மகிழ்ந்தனர்.

1961, ஜனவரியில் பர்மா சென்றிருந்த போது, இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் தர்ம பரிபாலன சபையார் ராய. சொ. அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தி, '**சிவமணி**' என்ற பட்டமும் சூட்டினுர்கள்.

1963 ஏப்ரலில் கோலாலம்பூரில் அருள் நெறித் திருக் கூட்டத்தார் ராய. சொ. அவர்களின் சைவ சமய ஈடுபாட்டையும், தொண்டையும் சிறப்பிக்கும் வகையில் '**சிவம் பெருக்கும் சீலர்**' என்ற பட்டமளித்துப் பேருவகை கொண்டனர். கோயம்புத்தூர், ஈரோடு, பவானி முதலிய இடங்களிலுள்ள மெய்யன்பர்கள் 'தமிழ்க்கட'லாருக்குப் பொன்னுடை போர்த்தி, பதக்கம் அணிவித்துச் சிறப்பித்துள்ளார்கள்.

5—12—64 அன்று சென்னையில் தமிழ் எழுத்தாளர் சங்கச் சார்பில் 'தமிழ்க்கடல்' ராய. சொ. அவர்களுக்கு ஒரு பாராட்டு விழா நடாத்தி தமிழ் நாட்டின் தலைமை நீதிபதி அனந்தநாராயணன் அவர்களைக் கொண்டு கேடயம் வழங்கப் பட்டது.

இராமனுதபுரம், புதுக்கோட்டை மன்னர்கள் 'தமிழ்க்கட' லாருக்குப் பொன்னுடை போர்த்திப் பெருமைப்படுத்தியுள்ளார்கள்.

**தமிழ் பரப்பும் தொண்டு**

'தமிழ்க்கடல்' ராய. சொ. அவர்களுக்கு இப்பொழுது 71 வயது. இந்த வயதிலும் இளமை முறுக்குடன் தாய்மொழிச் சேவையைத் திறம்பட ஆற்றுவதில் ஆர்வம் காட்டி வருகிருர். அதனுல் சிரமத்தைப் பாராது அழைப்பை ஏற்று அங்கங்கே சென்று தமிழ்பரப்பும் நற்தொண்டை நாள் தொறும் செய்து வருகிருர். வேறு மாநிலங்களுக்குச் சென்று அங்கும் தமிழ் மணம் பரவச் செய்து வருகின்ருர்.

1960 ஆண்டு, ஜனவரி மாதம் கல்கத்தா தமிழ்ச் சங்க அன்பர்கள் அழைப்பை ஏற்று, அங்கு சென்று, இருவாரங்கள் தங்கித் தாய்மொழிப் பணி பெருகச் செய்துள்ளார். மீண்டும் பர்மா சென்று திரும்பிய சமயமும் கல்கத்தாவில் தங்கி இலக்கியப் பெருவிருந்துகள் அளித்துள்ளார்.



இந்து மதாபிமான சங்கக் கட்டிடம்,
கால்கோள் விழா ஆற்றிய
திரு. வி. கலியாண சுந்தர முதலியார்

நாள் : 31—12—1943



மகாவித்வான்
சு. சிதம்பர ஐயர்
தமிழ்க்கடல்
ராய. சொ.விற்கு
தமிழ் இலக்கணம்
கற்பித்த ஆசிரியர்



சிவத்திரு, பழநி
ஈசான சிவாச்சாரியார்
தமிழ்க்கடல்
ராய. சொ.விற்கு
பஞ்சாட்சர உபதேசமும்,
திருவாசக பூசையும்,
சிவபூசையும் அருளிய

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் அழைப்பை ஏற்று, இரு முறை அங்கு சென்று இலக்கிய விரிவுரைகள் நிகழ்த்தியுள்ளார்.

**இலக்கிய-சமய-பாடப் பணி**

சார்வரி, ஐப்பசி மாதம் 15-ஆம் தேதி (31—10—60) ராய. சொ. அவர்களின் அருமை வாழ்க்கைத் துணைவியார் உமையாள் ஆச்சி சிவபதவி எய்தினர்கள். அந்தத் தாங்கொணுத் துயரம் காரணமாக ராய. சொ. அமராவதி புதூரில் தமது வீட்டில் தங்கியிருக்க விரும்பவில்லை. இந்து மதாபிமான சங்கத்தில் ராய. சொ. அவர்கள் பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், வில்லி பாரதம் முதலிய இலக்கிய-பத்திப் பனுவல்களுக்கு வாரந்தோறும் சனி, ஞாயிறு நாட்களில் மாலை இரண்டுமணி நேரம் விளக்கம் தந்துதவினர்கள்.

**ஆலயப் பணி**

ராய. சொ. அவர்கள், காரைக்குடி நகரச்சிவன் கோவிலின் மேற்பார்வையாளராக ஓராண்டு பணிபுரிந்தார். தமிழோடு இசை பாடல் மறந்தறியாச் சிவத்தளியாக அச்சிவன் கோவிலை விளங்கச் செய்தார். ஒவ்வொரு சந்நிதியிலும் தெய்வப் பாடல் ஒளிவிடும் காட்சியை இன்றும் கண்டு மகிழலாம். அகமும், புறமும், தூய்மை யாகத் துலங்கவேண்டும் என்பதில் மிகுந்த நாட்டமுள்ளவர் ராய. சொ. ஆகவே அவரது நிருவாகத்தில் நகரச்சிவன் கோவில் 'சுத்தமே சிவம்' என்ற சூழ்நிலையில் விளங்கியதில் என்ன ஆச்சரியம்? செல்வர்களைக்கொண்டு சுவாமிகளுக்கு ஏராளமான வெள்ளி அங்கிகள் செய்துவைத்தார்.

ராய சொ. அவர்களின் பரம்பரையைச் சேர்ந்த காரைக்குடி நாகநாதபுரம் பெருமாள்-சிவன் கோவில்கள சில ஆண்டுகளுக்கு முன்வரை மிகவும் பழுதுபட்ட நிலையில் இருந்தன. ராய. சொ. அவர்கள் கோவில் நிர்வாகத்தின் தலைமையை ஏற்றவுடன் கோவிலைச் செப்பனிட்டு வருவாயை ஒழுங்குபடுத்தி, அதை நல்ல நிலைக்குக் கொண்டுவர விரும்பி மிகவும் பாடுபட்டார்கள். கிட்டத்தட்ட ஒரு லட்சம் ரூபாய்கள் நன்கொடை வசூலித்து, திருப்பணி செய்து, பெரும் பொருட் செலவில் குடமுழுக்கும் செய்தார்கள். சந்நிதிகளிலும்,

சுவர்களிலும் தெய்வப்பாடல்களைத் தீட்டச்செய்தார்கள். அதோடு பக்திச்சுவை நனி சொட்டச் சொட்ட தேமதுரத் தமிழில் நாயன்மார் வரலாற்றை அருளிய சேக்கிழார் பெருமானுக்கு இரண்டாண்டுகளாக இக்கோவிலில் விழா எடுத்துச் சிறப்பித்து வருகிறார்.

### திருத்தலப் பயணம்

சைவ, வைணவ சமரச நோக்கம் கொண்டவர் தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள். தேவாரப் பாடல்பெற்ற திருத்தலங்களுக்கும் இன்னும் சிவநேசச் செல்வர்கள் பாடியருளிய திருத்தலங்களுக்கும், ஆழ்வார்கள் பிரபந்தம் அருளிய திருத்தலங்களுக்கும் சென்று வணங்கும் கொள்கையுடையவர். அவ் அத்தலங்களில் அதற்குரிய தெய்வப்பாடல்களைத் தாமே பாடியும், பாடிக்கேட்டும் இன்புறும் சிந்தையர், ராய. சொ. அவர்கள். தேவாரத் தலங்கள் 275-இல் 269 திருத்தலங்களுக்கும், ஆழ்வார் பாசுரங்கள் பெற்ற 108 திருப்பதிகளில் 99 தலங்களுக்கும் இரு தடவைகளுக்கு மேலும் போய்வரும் பேறு பெற்றிருக்கிறார். தாம் முன்னர் ஒருமுறை சென்று வந்த எல்லாத் தலங்களுக்கும் அன்பர் திரு. க. வெ. சித. வெ. வெங்கடாசலம் செட்டியார் அவர்களுடன் மறுமுறை சென்று வணங்கும் வாய்ப்பினைப் பெற்றார். இதன் விளைவாகத் 'திருத்தலப் பயணம்' என்னும் அரிய விரிவான நூலொன்றும் வெளியிட்டு உள்ளார்.

### வடநாட்டு திருத்தலப் பயணம்

வடநாட்டில் பம்பாய், நாசிக், பஞ்சவடி, முதலிய க்ஷேத்திரங்களுக்கும், கல்கத்தாவில் காளிகட்டம், இராமகிருஷ்ணாலயம், வைகுந்த நாதர்கோயில் முதலியவற்றிற்கும், அயோத்தி, காசி, திருக்கோகர்ணம், ஸ்ரீசைலம், அகோபிலம், மகாநந்தி, நேபாளம் முதலிய இடங்களுக்கும் சென்று ஆண்டவனை வழிபட்டு வந்து இருக்கிறார். 1968 டிசம்பரில் துவாரகை சென்று கண்ணனைக் கும்பிட்டு வந்தார்.

துவாரகை செல்லுகையில், காந்தியடிகள் பிறந்தருளிய புண்ணியத்தலமாகிய போர்ப்பந்தர் சென்று, அம்மகான் அவதரித்த இல்லக்கோயிலையும் கண்டு, வணங்கும் பேறு பெற்றார்.

## சிவபூசை

சிவஞானம் குழைத்தூட்டும் சிவாகம நூற்கு எல்லைகண்ட பெருந்தவத்தார், ஈசான சிவாச்சாரியார் அவர்களால் ராய. சொ. அவர்கள் சிவபூசை எழுந்தருள்விக்கப்பெற்றுர். இதற்கு மிகுந்த தூண்டுதலாயிருந்தவர் சிவ நேசச் செல்வர் முத்த. வெ. சொக்கலிங்கச் செட்டியாரும், தமிழ் வள்ளல் சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரும் ஆவர்.

1958இல் சிவபூசை எடுக்கும் பேறு

தாதுஆடு பூஞ்சோலைத் தத்தாய்! நமைஆளும்
மாதுஆடும் பாகத்தன் வாழ்பதிஎன்? கோதாட்டிப்
பத்தர்எல்லாம் பார்மேல், சிவபுரம்போல் கொண்டாடும்
உத்தர கோச மங்கை ஊர்.

என்று மணிவாசகப் பெருமான் உள்ளம் உவந்து உருகிப்பாடும் உத்தரகோசமங்கையில் பெறக்கிடைத்தது. இதை ராய. சொ. அவர்கள் எண்ணியும், சொல்லியும் மகிழ்வர்.

ராய. சொ. அவர்கள் சிவபூசை செய்யும் காட்சி, சிந்தையை உருக்கிச் சொக்கவைக்கும். பூசை நடக்கும் இடத்தில் தண்ணீர்த் துளிகள் அங்கங்கே சிதறித் தோற்றமளிப்பதையோ, மலர்கள் விழுந்து கிடப்பதையோ காணமுடியாது. மலர் வழிபாட்டில் இறைவனைச்சுற்றி அலங்காரமாகப் பல்வேறு வண்ணமலர்களை அணிவித்தும் அழகு தனி. தவிர, பூசைச் சாமான்கள் தூய்மையான பொலிவுடன் இருக்கும். பூசை முடிந்தபின் அவற்றை ஒரே சீராகப் பூசைப் பெட்டியில் எடுத்து வைத்து விட்டு, அவர் எழுந்திருக்கையில், அந்த இடம் பூசை செய்த இடம் போல் தண்ணீரும், மலரும் கொட்டிக்கிடக்கும் நிலையில் இராது. ஒவ்வொரு விநாடியும் பூசைச் சிறப்பினை எடுத்துக்காட்டும். அக்காட்சியினை உடனிருந்து பார்ப்பவரே உள்ளவாறு அறிவர்.

## நூலகக் கொடை

வள்ளல் அழகப்பரின் பொய்யா வண்மையை, தன்னலமற்ற ஈகையை, உடைமை முழுதும் துறந்த ஒப்புரவினைப் புலவர் ராய. சொ. மிகவும் மதிப்பவர். எனவே அம்மதிப்பிற்கு ஒரு

சான்றாக, தாம் வாழ்நாள் முழுதும் சேகரித்துத் தொகுத்த பெரு நூல் நிலையத்தை அழகப்பா கலைக்கல்லூரிக்கு வழங்கினார். அழகப்பாரின் கொடைச் சிறப்பைத் தம் கொடையால் மதித்தார். அதாவது கல்விக்குக் கொடைசெய்த வள்ளலுக்கு நூற்கொடை செய்தார். ராய. சொ. கிடைத்தற்கரிய பதிப்புகளும், திங்கள் இதழ்களும், அகர நூல்களும் கொண்டது. திருக்குறள், இராமாயணம் இவற்றின் பல பதிப்புகள் இந்நூலகத்து உள. இலக்கண, இலக்கிய, சமய, அரசியல் நூல்கள், பல்வேறு உரை நூல்கள், பல்பொருள் பற்றிய உரைநடை நூல்கள் ஏராளமாக இந்நூலகத்தில் உள ஆனந்த போதினி, செந்தமிழ்ச் செல்வி செந்தமிழ், குமரன், நவசக்தி, ஊழியன் இவற்றின் இதழ்த் தொகுதிகளும் இந்நூலகத்தில் உள.

'தமிழ்க்கடல்' உவந்தளித்த நூலகக் கொடையை மதித்துப் பாராட்டும் வகையில் அழகப்பா கல்வி அறநிலையத்தார் ஒரு சிறப்பு விழா நடத்தினார்கள். அவ்வமயம் ராய. சொ அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவிக்கப்பட்டது. அப்போது முன்னாள் மாநிலக் கல்வி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள், 'ராய சொ. ஒரு நடமாடும் நூலகம்; ஆகவே அவர் நன்கொடை அளித்துள்ள அத்தனை நூல்களும் அவரிடம் குடி கொண்டவை'; எனவே இந்நூலகம் அவருக்குத் தேவையில்லை யல்லவா? என்று மகிழ்ந்து பாராட்டினார்கள்.

### தமிழ்ப்பெரு நூல்களைப் பரப்பும் பணி

#### [அ] தொகுப்பு

தமிழ்ப் பெருநூல்களின் பாடல்கள் எண்ணிறந்தவை. அதோடு அவை அச்சிட்டுள்ள முறை, சந்தி-சீர் பிரியாது க்யூ வரிசை போல் அமைந்திருப்பது, புணர்ச்சி மயக்கம் இவை காரணமாகத் தமிழ் இலக்கியப்-பக்திப் பனுவல்கள் படிப்போருக்கு இடர்தருகிறது என்றும் அவற்றைச் சிறிய தொகுப்பு நூல்களாக பாமரனும் படிக்கும் வண்ணம் வெளியிட வேண்டும் என்ற கொள்கையில் அழுத்தமான நம்பிக்கை கொண்டவர் ராய. சொ. அவர்கள். அந்த முறையில், நயம் சான்ற செய்யுட்களைத் தொகுத்து, நிரல் படுத்தித் தக்க குறிப்பும் எழுதி இவர் பதிப்பித்த நூல்களின் விபரம் இவ்வெளியீட்டின் இறுதியில் தரப்பட்டுள்ளன

இம்முறையினால் பெருஞ்செல்வர்களைத் தமிழ்ச் செல்வராகவும், தமிழன்பராகவும் ஆக்கிய பெரும் பெருமை ராய. சொ. வுக்கு உண்டு.

### [ஆ] உரை நடைப் படைப்பு

ராய. சொ. பைந்தமிழ் சொட்டும் பல உரை நடை நூல்களும் எழுதியுள்ளார். அவைகளின் விபரமும் இந்நூலின் பின்னே கொடுக்கப்பட்டுள்ளன.

### [இ] கவிதை அஞ்சலி

ராய சொ. பழமை போற்றிப் புதுமை கொள்ளும் தமிழ்க் கவிஞர். யாப்பு மரபு கெடுவதைப் பொருத புலவர் இவர். காந்திப் பெருமானைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றியும், புதுமை விழைந்தும் விடுதலை நாயனாகிய ராய. சொ. இயற்றியுள்ள கவிதை நூல்களின் விபரம் அடுத்துவரும் பக்கங்களில் காணலாம்.

## தமிழ் ஆராய்ச்சித் தொண்டு

வள்ளல் அழகப்பர் அவர்கள் வாழ்ந்த காலத்திலேயே தமது கல்லூரியில் ராய. சொ. அவர்களைத் தொடர்வுபடுத்த வேண்டும் என்று விருப்பினார். அன்று அதற்கு திருவருள் கூட்டவில்லை. அழகப்பர் கல்லூரிகளைத் திறம்பட நடத்தி வந்த நிருவாகி திரு. க. வெ. சித. வெ. வெங்கடாசலம் செட்டியார் அவர்களின் அழைப்பை ஏற்று, 1962 செப்டம்பர் மாதம் முதல் ராய. சொ. அவர்கள் அழகப்பா கல்லூரி வட்டத்தில் குடியேறினார்.

அழகப்பா கலைக்கல்லூரியில் புதிதாகத் தொடங்கப்பட்ட தமிழ் ஆராய்ச்சித் துறையின் கௌரவத் தலைமைப் பொறுப்பாளராக இருந்து தமிழ் இலக்கியங்களை ஆய்ந்து வெளியிடும் பணியில் ஈடுபட்டுள்ளார் ராய. சொ. அவர்கள். அதன் சார்பில், 'கம்பனும் சிவனும்', 'வில்லியும் சிவனும்' என்று இரு அரிய ஆராய்ச்சி நூல்களை இயற்றி வெளியிடச் செய்துள்ளார்.

காந்தி நூற்றாண்டு விழாவினை ஒட்டி அன்னார் மீது ராய. சொ. தாம் முன்னர் பாடிய 901 பாடல்களையும் தொகுத்து

'காந்திக் கவிதை' என்ற தலைப்பில் ஒரு கவிதை நூல் 2—10—69 அன்று சென்னையில் வெளியிட்டு மகிழ்கிறார்.

### சிறப்பு இயல்புகள்

தமிழ்நாட்டிலும், அயல் நாட்டிலும் ராய. சொ. வின் சொல் ஆற்றலும், நூலாற்றலும் பரவிக்கிடக்கின்றன. அரசியற் பொழி வாயினும், இலக்கியப் பொழிவாயினும் கணீரென்ற ஒலியோடும், அழுத்தத்தோடும், இடித்துப் பொழியும் முகில் போலப் பேச வல்லவர். பல்லாயிரக்கணக்கான பாடல்கள் மனப்பாடம். மேற் கோள், ஒப்பு நோக்குதல் முதலியவற்றைத் தமது சொற்பெருக்கில் பிறர் வியக்கும் வகையில் கையாள வல்லவர். நினைவாற்றலில் அவருக்கு நிகர் அவரே. ஒளிவு, மறைவு இன்றி உள்ளத்துப் பட்டதைப் பட்டாங்கே கூறும் நேர்மையாளர். எந்தச் சிறு காரியத்தையும் கவனத்துடன் செய்பவர்; அதில் ஒரு நியதியும் இருக்கும். செய்வன திருந்தச் செய்யவேண்டும்; காலத்தை ஓம்ப வேண்டும்; கலை மிளிர எப்பணியையும் இயற்றவேண்டும்; உடனுக்குடன் செய்ய வேண்டியதை ஒத்திப் போடக்கூடாது என்பது போன்ற அரியபல நலன்களுக்கு இருப்பிடமாகத் திகழ்ந்து காட்சி தருபவர் ராய. சொ.

### ★ உற்றது பேரின்ப வீடு

முதிர்ந்த அகவையிலும் முத்தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டி யற்றிய, அசைவிலா ஊக்கமுடைய தமிழ்க்கடல் இராய. சொ. இன்சுவைக் கவி பாடிய வண்கவி வள்ளல் தன் இல்லக்கிழத்தியார் திருமதி உமையாள் ஆச்சி மறைந்த வெள்ளிக்கிழமையன்று அவர் நினைவாக வாரந்தோறும் இரவு உண்ணுமல் இருந்து வருகிற பழக்கத்தை மேற்கொண்டிருந்தார். அதுபோல் 30—9—74 ஒரு வெள்ளிக்கிழமை அன்று தனது மேற்பார்வையில் இயங்கி வந்த நாகநாதபுரம் சிவன் கோவிலில் எழுந்தருளியுள்ள நடராசப் பெருமானின் அபிடேகம். மாலை கோவிலுக்குச் சென்று ஆனந்தக் கூத்தனின் அபிடேகத்தை அகங்குளிரக் கண்டு, அபிடேகப் பால் அருந்தி, இந்து மதாபிமான சங்கத்திற்கு மீள வந்து கீழ்க் கட்டத்தில் நுழைந்து எப்பொழுதும் சிறிதுநேரம் ஓய்வெடுத்தபின் மேல்மாடி செல்லும் பழக்கமுள்ளவர்கள் அன்று ஓய்வு

எடுக்காமலேயே உடனேயே மேல்மண்டபம் ஏறியவர்கள் நிலையான ஓய்வெடுக்க எண்ணியோ, அன்றி எல்லாம் வல்ல சிவபெருமான் இன்தமிழ்க் **கவியமுதம் உண்ண விரும்பி அழைத்தானோ தெரியவில்லை.** இரவு மணி 9க்கு இறவாப் பேரின்ப வீடாகிய இறைவன் திருவடியடைந்தார். அவர்கள் வீடு பேறு எய்திய அன்று உரைத்த பாடல், மனமெலாம் கலந்து நின்ற மாணிக்கவாசகரின் திருவாசகப் பாடலாகும். அப்பாடல் இதோ.

நோயுற்று மூத்துநான் நுந்து—கன்றாய் இங்கிருந்து
நாயுற்ற செல்வம்நயந்(து) அறியா வண்ணமெல்லாம்
தாயுற்று வந்தென்னை யாண்டுகொண்ட தன்கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

( திருவாசகம்-திருக்கோத்தும்பி-10ஆம் பாடல் )

பக்திச்சுவை மணங்கமழப் பாடிய புலவர்களின் பாச்சுவை கண்ட தமிழ்க்கடல் இராய. சொ. எல்லாம்வல்ல இறைவன் திருவடிக்கீழ் பல்லோரும் ஏத்தப் பணிந்து வாழ்கிறார். தமிழ் உள்ளளவும் தண்டமிழ்த் தேவாரம் திருவாசகம் உள்ளளவும் அவர் புகழ் வாழும் என்பதில் ஐயமில்லை.

**ராய. சொ. திரு நாமம்**
**என்றென்றும் இனிது வாழ்க**

தொகுப்பு

அழகப்பாபுரம்
காரைக்குடி-3

**ரா. பத்மநாபன்.**

★ உற்றது பேரின்ப வீடு — இப்பதிப்பில் புதிய சேர்க்கை.

"சிவம்பெருக்கும் சீலர்" "சிவமணி" "வண்கவி வள்ளல்" "தமிழ்க்கடல்"

## இராய. சொக்கலிங்கம் அவர்கள்

# இரங்கற்பா

திருவாச கத்தேனும் தேவார மணிநூலும்
அருள்ஆழ்வார் அமுதும்மெய் யன்பர்பலர் துணைக்கொண்டு
உருவாக்கி வெளியிட்ட உத்தமனே **சொக்கலிங்கப்**
பெரும! நீ எமைவிட்டுப் பிரியமனம் கொண்டனையோ?

மனிதகுலம் உய்யவந்த மகாத்மனை யன்றிளந்தத்
தனிமனித ரையும்பாடாத் தகவுடைய தமிழ்க்கவிஞ!
புனிதன் அவன் பிறந்தநாள் பொன்னுலகிற் கொண்டாடி
இனிதேத்திப் பாடுவான் இவ்வுலகை நீத்தனையோ?

திங்களிலே புரட்டாசி திருமாலுக் குகந்ததென்பர்
திங்களனி செஞ்சடையாற்கு உற்றநாள் திங்களென்பர்
சங்கரன்மாற்கு அன்புடைய தமிழ்க்கடலே! புரட்டாசித்
திங்களெனும் நன்னாளில் தெய்வநிலை உற்றனையே!

பாலும் கசந்ததெனப் பாற்கடலை விட்டுநெடு
மாலும் தமிழ்க்கடலை வரவழைத்துக் கொண்டானோ?

சீலமிகு சிவமணியின் செந்தமிழ்கேட் டின்புறவே
ஆலம்உண்ட கண்டன் அருகழைத்துக் கொண்டானோ?

வன்கவிகள் பலவழங்கும் வள்ளல்எனத் தானறிந்து
விண்ணுலகிற்கு இந்திரனும் விழைந்தழைத்துக்
கொண்டானோ?

இமைப்பொழுதும் பொய்சொல்லா மெய்யன்பன் என்றறிந்து
உமைபங்கன் திருவடிக்கீழ் உவந்தழைத்துக் கொண்டானே?

தமிழ்க்கவிகள் உரைத்துரைத்துத் தழும்புறுசெந்
நாவுடையாய்
தமிழ்க்கவிதை நயம்நினைப்போல் சாற்றவல்லார் யாரேயோ?

தம்மைமணி வாசகர்க்குத் தந்தவரைத் தான்கொண்ட
அம்மையப்ப னேசதுரன் என்றஉரை யார்பகர்வார்?

நீயில்லாச் சங்கத்தை நினைக்கவொண்ணு திருக்கின்றோம்
தாயில்லாச் சேய்கள்போல் தவிப்பதனை ஓராயோ

நிறைவாழ்வு நீனிலத்தில் நீவாழ்ந்தாய் என்றாலும்
மறைவாய்நீ விரைவிலென மனத்தில்உன்னிப் பார்த்ததில்லை

தேவாரப் பாமணியும் திருவாச கத்தேனும்
நாவார ஓதிமகிழ் நல்லோர்கள் நெஞ்சினிலே
நீவாழ்வாய் என்றென்றும் நின்னுமம் வாழ்கவென
மூவா முதல்வன்இரு முளரித்தாள் போற்றுதுமே.

பேருலவும் ஆனந்த வருடம் தன்னில்
பிறங்குமதி புரட்டாசி நாளீ ரேழில்
ஏருலவு முழுநிலவில் சோம வாரத்
தினியதமிழ்ப் பெருங்கடலான் **சொக்க லிங்கன்**
பாருலகில் பூதஉடம் பதனை நீத்துப்
பன்னரிய புழுடம்பு பெற்றுக் கங்கை
நீருலவு வேணியரன் கமலப் பாத
நிழல்உற்றான் அவன்ஆன்மா கொள்க சாந்தி.

**சொ. தேவராஜன்,**
பட்டுக்கோட்டை.

**இராம. வீரப்பன்**
செய்தி - அறநிலையத்துறை
அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை-600 008.

தெய்வத்தமிழ்ப் பணிக்கும், தேசத் தொண்டிற்கும் நற்பணியாற்றிய சான்றோர், பலர் சிறப்புமிகு செட்டிநாட்டில் தோன்றியுள்ளார்கள். அத்தகைய சான்றோர்களில் தமிழ்க்கடல் இராய. சொ. அவர்கள் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளார்கள்.

தமிழ்க்கடல் இராய. சொ. அவர்கள் சிறந்த தேசீயத் தொண்டர். செட்டி நாட்டிலிருந்து விடுதலைப் போராட்டத்தில் முதன் முதலாகச் சிறை சென்ற தியாகச் சிறப்பு இவருக்கு உண்டு. விடுதலைப் போராட்டத்திலும், தீவிர பிரச்சாரத்திலும் தேனினும் இனிய தமிழ் மணம் கமழச்செய்து மொழி உணர்வு ஊட்டியது இவரது மிகச் சிறந்த பணி. 'ஊழியன்' என்னும் இதழைப் பல ஆண்டுகளாக நடத்தி, தமிழகத்தில் இன்று பாராட்டப்படும் பல எழுத்தாளர்களை உருவாக்கிய பெருமையும் இவரைச் சாரும். நல்ல தமிழுக்கு 'நவசக்தியும்' 'ஊழியனும்' என்று ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர், தமிழறிந்தோர் கருதினார்களென்றால் தமிழ்க்கடல் இராய. சொ. அவர்களின் தமிழறிவையும், புலமையையும் நாம் நன்கு உணர முடியும். இடைக்கால நூல்கள் பற்றி மக்கள் அறிந்து கொள்ளும் வகையில் இவர்கள் பணி ஆற்றி உள்ளார்கள்.

கலை வளர்க்கும் செட்டி நாட்டவர்களுக்கு உரிய முறையில், இராய.சொ. அவர்கள் தமிழ்ப்பாசுரங்களைப்பண்ணிசையோடுபாடி, பிறரைப் பரவசமடையச் செய்வதுண்டு. செட்டிநாட்டுச் செல்வந்தர்கள் பலருக்கு இராய. சொ. அவர்கள் தமிழ் ஆசானாகத் திகழ்ந்தார்கள். இவர்களைப் பற்றி, தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள் குறிப்பிடுகையில் "சொக்கலிங்கனார் கல்வி வேள்வியுடையவர்; ஆராய்ச்சியாளர்; காய்தல் உவத்தலின்றி எதையும் சிந்தித்து முடிவு காண்பவர்; காரைக்குடி நகரசபைத் தலைவராய்

இருந்தவர் ; இப்போது பாட்டிலும் மூழ்குகிறார். அவர் வாயிலாக செட்டிநாடு தமிழ்க்கலையில் எழுச்சி பெறுமென்னும் உறுதி எனக்கு ஏற்பட்டது " என்று கூறி, புகழாரம் சூட்டுகிறார்கள்.

திரு. இராய. சொ. அவர்கள் சிறந்த பதிப்பாளர் என்று கூறுவது மிகையாகாது. 'விறலி விடு தூது', 'திருவாசகத்தேன்' 'பாவைப்பாட்டு' முதலிய நூல்களை உரையோடு பதிப்பித்துள்ளார். பாடல் பெற்ற திருத்தலங்கள் அனைத்திற்கும் சென்று, தேவாரப் பாடல்களைச் சிறந்த முறையில் கையடக்கப் பதிப்பாகவும் வெளியிட்டுள்ளார்.

தமிழறிஞர்களையும், தமிழ்ப் பேராசிரியர்களையும் பெருமைப்படுத்துவதில் தமிழ் மக்கள் என்றும் பின்வாங்கியதில்லை. இப்பண்பிற்கேற்ப, காரைக்குடி இந்து மதாபிமான சங்கம், தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம் அவர்களின் திருவுருவச் சிலையைத் திறக்க இருப்பது, மகிழ்ச்சி தருவதாகும். தமிழ்க்கடல் அவர்களின் திருவுருவச் சிலை திறப்பு விழா இனிது நடந்தேற என்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவிப்பதோடு, அவர்களின் நினைவு என்றென்றும் தமிழ் மக்களின் உள்ளங்களில் நீங்காதிருக்க நாம் அனைவரும் உறுதி கொள்ள விழைகிறேன்.

டாக்டர் இரா. நெடுஞ்செழியன்
எம்.ஏ., டி.லிட்.
நிதி அமைச்சர்.




தலைமைச் செயலகம்
சென்னை-600 009.

## வாழ்த்துச் செய்தி

'தமிழ்க்கடல்' என்று தமிழ்ச் சிரியோர்களால் போற்றப்படும் பெருந்தகை இராய.சொ. அவர்களின் திருவுருவச் சிலைத் திறப்பு விழா 22—1—1984 அன்று காரைக்குடியில் நடைபெறுவதறிந்து மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். தமிழ் இலக்கியங்களின் நயங்களைப் பிழிந்தெடுத்து, ஒருவர் செவிவழி ஊட்டி சிந்தனையில் பேரின்பத்தை உண்டாக்கும் தனித்திறமை பெருந்தகை இராய.சொ. அவர்களிடம் நிரம்ப இருந்தது. தமிழ்ப் பெருங்குடி மக்கள் தமிழார்வம் கொள்ளவும், தமிழை வளர்க்கும்படித் தூண்டவும் அவர் ஆற்றிய தொண்டுகள் அளப்பரியனவாகும்.

விழா சிறப்பாகவும் செம்மையாகவும் நடைபெற என் உளங்கனிந்த வாழ்த்துக்கள் பலவும் உரியவாக!



Dr. RAJAH
SIR. MUTHIAH CHETTIAR
OF CHETTINAD.

CHETTINAD HOUSE,
RAJA ANNAMALAIPURAM,
MADRAS-600 028.



இராய. சொ. அவர்களின் திருவுருவச் சிலை தங்கள் சங்கத்தில் அமைய வேண்டியது மிகவும் முக்கியம். இதை, தாங்களும் செயலாளர் அவர்களும், தங்கள் சங்கத்தின் அங்கத்தினர்கள் அனைவரும் கருத்திற்கொண்டு ஏற்பாடுகள் அனைத்தும் செய்து வருவதை மிகவும் பாராட்டுகிறேன். இத்திறப்பு விழாவை முன்னிட்டு மலர் வெளியிட, தீர்மானித்து இருப்பதும் சாலப் பொருத்தமாகும். தங்கள் முயற்சி வெற்றி பெறவும் திருவுருவச் சிலை திறப்பு விழா இனிதே நடைபெறவும் பிரார்த்திக்கின்றேன்.

உ
குருபாதம்

திருக்கயிலாயபரம்பரைத்
தருமையாதீனம் 26–வது
குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள்**



தருமபுரம்
மயிலாடுதுறை - 609 001.

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே''

உலகமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ் என்றும், என்றுமுள தென்தமிழ் என்றும் போற்றப் பெறும்சிறப்பு நமது தமிழ்மொழிக்கு உண்டு. சைவ சமயம் தமிழ்மொழி வளர்ச்சியில் ஆற்றியிருக்கும் பங்கு பெரிது. சைவமே தமிழாகவும், தமிழே சைவமாகவும் போற்றப் பெற்றன. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன் எனப் போற்றினர் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

'தமிழ்க் கடலாக' விளங்கித் தெய்வத் தமிழ் வளர்த்த அன்பர் ராய. சொக்கலிங்கனுர் காரைக்குடி இந்து மதாபிமான வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டவர். மறைந்த இவர்களின் உருவச் சிலை திறப்பு விழாவில் வெளிவர இருக்கும் மலர் பல்வேறு நலம்பொதிந்த பயன்பாடு மிக்கதாய் மலர எல்லாம் வல்ல ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்ருேம்.



ஸ்ரீஸத்குரு ஸதாசிவ ப்ரும்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள்

அதிஷ்டானம் புதுக்கோட்டை-622 001.

## ஸ்ரீஸ்ரீசத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்களுடைய அருளாசிச் செய்திகள்

காரைக்குடி, இந்துமதாபிமான சங்கத்தை வளர்த்த அமரர் தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனார், அவர்கள் தமிழ் கடல் மாத்திரமல்லாது அன்புக்கடலுமாவர்.

தர்மம் மிகுந்த நகரத்தார்களில் அறிவுக் கடலாகவும் பிரகாசித்துக் கொண்டிருந்த இராய. சொக்கலிங்கனார் அவர்களின் உருவச்சிலையைத் திறப்பு விழாச் செய்வதுடன் நல்லறிவும், நல்லொழுக்கமும் நல்ல பெரியமனமும் உள்ளவரான இராய. சொக்கலிங்கனார் அவர்களின் நினைவாக மலர் ஒன்றும் வெளியிடுவதானது மிகவும் போற்றத்தக்கதாகும்.

இராய. சொக்கலிங்கனார் அவர்கள் தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெற வேண்டுமெனவும் ஆர்வமுள்ள உத்தமராவர். நமது தமிழ்த்தாயின் ஸத்புத்ரனான இராய. சொக்கலிங்கனார் அவர்கள் எழுத்திலும், பேச்சிலும் இருந்து வந்த ஆழ்ந்த தமிழ்ப் புலமை தமிழகத்தின் (தமிழின்) மறுமலர்ச்சிக்கு புத்துயிர் ஊட்டுவதாகவே இருந்துவந்ததாகுமென்று தான் சொல்ல வேண்டும்.

குருவருளும் திருவருளும் பெற்று தமிழகமே தமிழ்க்கடல் எனப் போற்றப்பட்டு வரும் இராய. சொக்கலிங்கனார் அவர்களின் பேச்சு தமிழ் அம்ருதமழை அதாவது சரமழை போலிருக்கும்.

தமிழ்க்கடலாகிய இராய. சொக்கலிங்கனார் அவர்களுடன் பழகிய அனைவருமே இராய. சொ. அவர்களின் அன்புப் பிடியில் அகப்பட்டுக்கொண்டு விடுவார்கள்.

அன்புக்கடலானவரும், அறிவுக்கடலானவருமான தமிழ்க் கடல் இராய. சொக்கலிங்கனார் அவர்களுக்கு காரைக்குடியில் சிவன் கோவில் மேலை வீதியில் இருக்கும் இந்து மதாபிமான சங்கத்திற்கு முன்பு உருவச்சிலையை திறக்கும் 1984ஆம் ஆண்டு ஜனவரித்திங்கள் காரைக்குடிக்கே மிகப்புனிதமான நன்னுள் என்று தான் சொல்லவேண்டும்.

சம்சாரத்திற்குக் காரணமாகவும், சம்சாரத்தை அறவே அழிப்பவனுகவும், சம்சார உருவினனுகவும், சம்சாரத்திஞல் தீண்டப்படாதவனுவும் இருக்கிற சிவபெருமானைச் சிக்கெனப் பற்றிக்கொண்டு சிவபூசையை விடாது சிரத்தா பக்தியுடன் செய்து வந்து கொண்டிருந்த தமிழ்க்கடலான இராய. சொக்கலிங்கனார் அவர்கள் இறைவனுடைய அருட்பெருங் கருணையை நினைத்து நினைத்து உருகி சிவபூஜையை செய்வதைப் பார்க்கும் போது, அறிவுக்கடலானவரும், அன்புக் கடலானவருமான இராய. சொக்கலிங்கனார் அவர்கள் பிறவிப் பெருங்கடலை எளிதில் கடந்து விடவல்ல தீரபுருஷனுவர் என்றுதான் சொல்லவேண்டும்.

மனிதனுகப் பிறந்த நாம் இறைவனைச் சிக்கெனப்பற்றிக் கொண்டு வழிபடவே பிறந்துள்ளோமென்பதை நன்குணர்ந்த மேன்மகன் தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனார் அவர்களா வார்கள்.

அன்புக்கடலான இராய. சொக்கலிங்கனுர் அவர்கள் சேலம் ஸ்ரீஸ்கந்தாஸ்ரமத்திற்கு வந்துள்ளபோது அவர் சிரத்தாபக்தியுடன் சிவபூஜை செய்ததையும், உள்ளன்புடன் நெக்குருக திருமுறைகளை ஓதியதையும், ஆலய வழிபாடு செய்ததையும் பார்த்த போது இராய. சொ. அவர்களை சிவப்பழமாகவே கண்டோம்.

அறிக்கடலான இராய. சொக்கலிங்கனார் அவர்கள், மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தை சொல்லும் போது கேட்பவர்கள் தன்னையே மறந்துவிடுவார்கள்.

சிவசின்னங்களைப் பூண்டுகொண்டு சிவபெருமானை பூஜித்துக்கொண்டு எல்லாவற்றிலும் சிவனையே கண்டு போற்றிய தமிழ்கடல் இராய. சொக்கலிங்கனார் தமிழகம் உள்ளவரை அனைவருக்கும் காட்சி கொடுத்துக்கொண்டு இருந்து வரவேண்டும் என்கிறபெரிய மனதுள்ள காரைக்குடி நகரத்தார்கள், காரைக்குடி இந்துமதாபிமான சங்கத்தின் முன்பே இராய. சொக்கலிங்கனார் அவர்களின் உருவச் சிலையை திறப்பதானது தமிழ்நாட்டிற்கே ஒவ்வொரு தமிழனுக்குமே பெருமையாகுமென்று தான் சொல்ல வேண்டும்.

தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனார் உருவச் சிலையை திறக்க முன்வந்துள்ள அனைவருக்கும் சிவப்பிரஸாதம் ஸித்திக்க வேண்டுமென ஸ்ரீமாதாபுவனேஸ்வரி தேவியை பிரார்திக்கிறோம்.

உ
சிவ சிவ

**தவத்திரு.**
**குன்றக்குடி அடிகளார்**

குன்றக்குடி - 623 206.
இராமநாதபுரம் மாவட்டம்

# *வாழ்த்துரை*

தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள் சிவம்பெருக்கும் சீலராகத் திகழ்ந்தார்கள். செந்தமிழிலும் சிவநெறியிலும் தோய்ந்து வளர்ந்த ராய. சொ. அவர்களுடைய வாழ்க்கை, தமிழகத்திற்குப் பெரும்பயன் தந்த வாழ்க்கையாக அமைந்திருந்தது. ராய. சொ. அவர்களின் நினைவாற்றல் பாராட்டுதலுக்குரியது. தமிழ் இலக்கியங்களை மீண்டும் ஒரு கடல் கொண்டாலும் ராய. சொ இருக்கிறார்கள்; மறுபதிப்புச் செய்து கொள்ளலாம் என்றிருந்த நிலையில் காலதேவன் இமையோருக்குத் தமிழ்ப்பாடம் கற்றுத்தர ராய. சொ. அவர்களை அழைத்துக் கொண்டு சென்று விட்டான்.

ராய சொ. அவர்கள் கடைசிக் காலத்தில் சேக்கிழாரைப் போல் சிவன்கோயில் திருப்பணியையும் ஐயரவர்களைப் போல் பழந்தமிழ் நூல்களையும் வள்ளலாரைப்போல் இந்து மதாபிமான சங்கத்தையும் பேணி வளர்த்தார். ராய. சொ. அவர்களின் நினைவு திருவாசகத்தில் ஈடுபடும் மானுடம் உள்ளளவும் நிலை பெற்றிருக்கும். ஆயினும் அவர்தம் திருவுருவம் வைப்பது சிறப்பான ஒரு செயற்பாடே! ராய. சொ. அவர்களின் திருவுருவம் நமது மக்களிடத்தில் தமிழ் உணர்வையும் சமய உணர்வையும் வளர்க்கும் என்ற நம்பிக்கை நமக்கு மிகுதியும் உண்டு. அது மட்டுமல்ல. ராய சொ. அவர்கள் நாட்டுப்பற்றும் மிக்குடையவர்கள். பழமைப் பொலிவும் புதுமைப் பொலிவும் ஒருங்கே பெற்று விளங்கியவர்கள்.

ராய சொ. அவர்கள் நினைவு நமது நாட்டு மக்களை நெறிப் படுத்தத் துணை செய்வதாக! வாழ்க, ராய. சொ. அவர்கள் புகழ்!

உ
முருகா

கிருபானந்த வாரியார்
கோவை.

# வாழ்த்து

## நேரிசை வெண்பா

காரைக் குடிவாழி கன்னித் தமிழ்க்கடலாம்
பேரைப் படைத்த பெருந்தகையாம் — வார
மகிழ்ராய சொக்கலிங்க மன்னுகுண சீலன்
புகழென்றும் வாழ்க பொலிந்து.



வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன்
'கலைமகள்'
மயிலாப்பூர் - சென்னை.

## 'அகம் மகிழ்ந்தேன்'

தண்டமிழ்க் கடலின் ஆழத்தை உணர்ந்தோன், தமிழ்மொழி யினில்பலர் விருப்ப, இமிழ்தரு சொற்கள் பொருந்துசொற் பொழிவை இனிதுற ஆற்றிய பெரியோன், சிவபெருமானை நாள்தொறும் போற்றிச் சிறப்புறப் பூசை செய்திடுவோன், நவமுறப் பலவாம் நண்பர் நாள்தொறும் கூடிடச் செய்வோன், தமிழ்வழங் கிடங்கள் எங்கணும் சென்று, தகுதமிழ் விரிவுரை புரிவோன், அமிழ்துறுந் தமிழ்நூற் றொகுதிகள் பலவும், அகத்தினில் தொகுத்தவன், அழகார், திருவுருவச் சிலையைத் திறப்புறும் செய்தி, இவணுறக் கேட்டதும் மகிழ்ந்தேன் ; தமிழ்பயில் அன்பர் சிலையினை வணங்கி, சார்தரும் உவகை யைமிக் கார்க !

கவியோகி,
சுத்தானந்த பாரதியார்
" தவகிருஹம் "
சோழபுரம்-சிவகங்கை - 623 560.

அன்பீர் !

தமிழ்க்கடல், இராய. சொக்கலிங்கம் செட்டியார், செட்டி நாட்டிற்கு மறுமலர்ச்சி தந்த புலவர் மணி. கம்பனுக்கும் வள்ளுவருக்கும், பாரதியாருக்கும், இந்துமதத்திற்கும் அயராது பாடுபட்ட ஆர்வச் செம்மல் இராய. சொ. அக்காலம் நானும் அவருடன் கூடித்தமிழ்ப்பணி புரியும் பேறுபெற்றேன். அவர் காந்தி பக்தர், காந்திப்பிள்ளைத் தமிழ் பாடிய ஒள்ளியர். இந்துமதாபிமான சங்கத்தில் அவருக்குச் சிலை நாட்டி மலர்சூட்ட வேண்டுகிறேன்.

## 'சொக்கலிங்கன் கலை வளர்க'

பொருளீட்டி அறம்புரிந்து புகழோங்கும்
தனவணிகர் புரியாம் காரை
அருளீட்டும் அன்பர்பிரான்; அப்பரைப்போல்
வாழ்வுடையான், அரிய நண்பன்;
இருளோட்டி எந்நாளும் இன்பமே
இலகுவிக்கும் சைவ நேயன்;
திருராய சொக்கலிங்கம் திகழ்இந்து
மதம்போலச் சிறந்து வாழ்க!

திருவாளர் முருகப்பர், அழகப்பர்,
கம்பக்க ணேசர் மூர்த்தி
மருவுகவி பாரதியார் எல்லோரும்
நீடூழி வாழ்த்த வாழ்ந்தோன்
உருகுதமிழ் இசைபரவச் சைவத்தின்
ஒளிவிளங்க உழைத்த தொண்டன்
கருவிலே திருவுடைய சொக்கலிங்கன்
கலைவளர்க சிலைபெற் றோங்கி!

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

" தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர் மாமணி, பெரும் புலவர், பாலகவி "

வயிநாகரம் **வே. இராமநாதன் செட்டியார்** தத்புருஷதேசிகர்,

தேவகோட்டை.

# வாழ்த்துக் கவிதை

சிவபரம் பொருளின் திருவருள் வழங்கிய
செந்தமிழ்த் தலைமையை முந்துறப் பெற்ற
குடமுனி யுறையும் தடவரைத் தமிழகச்
செட்டிநன் ஞட்டில் எட்டு வான்குணத்
தீசனை யன்றிப் பேசா வணிகர்
குலத்தினை யாற்றக் குடிப்பெருங் கோயில்
உரிமைரா யப்ப உத்தமன் பெற்ற
திருமகன் இளமையிற் சிதம்பர ஆசான்
பயிற்றிய இயற்றமிழ்ப் பரிசினைப் பெற்ருேன்
நாட்டுப் பற்றில் நாட்டம் வைத்துப்
பணிபல புரிந்த துணிவினன் ஊழியன்
என்னும் பெயரால் இதழொன்று கண்டு
நல்ல கருத்து நண்ண உழைத்தோன்
திருவா சகத்தைத் தினமும் ஓதி
உருகா நிற்கும் உத்தமன் பழநியில்
சைவ சித்தாந்த சரப மாகத்
திகழ்ந்த ஈசான சிவகுரு கருணை
வாய்க்க உத்தர கோச மங்கையில்
மார்கழித் தெரிசன மாபெரும் விழாவில்
சமய விசேடத் தகையுறும் தீக்கைகள்
பெற்றுநாள் தோறும் பெருமான் மலரடிப்
பூசனை புரிந்த புண்ணியன் பலநாள்
மாண்புடன் இந்து மதாபி மான
சங்கத் திருந்து தமிழ்நூல் பயிற்றினேன்
மேயநற் புகழ்சேர் ராயசொக் கலிங்கன்
பெயர்நீ டுழி பிறங்கி வாழியர்!
மன்னுறும் இந்து மதாபி மான
சங்கப் பணிகள் தழைத்துவா ழியரோ.

நலமே தழைக



**SIVANANDA VIJAYALAKSHMI**

Shenoy Nagar,
MADURAI-625 020.

அன்புடையீர் !

வணக்கம்.

தன் மகளாக என்னைக் கருதி என்பால் பேரன்பு பொழிந்து, தமிழின்பம் எனும் அமுதத்தை ஊட்டி, நா நயம், பா நயம், சொல் நயம், பொருள் நயம் அனைத்திலும் தன் முத்திரை பதியுமாறு செய்த நமது மதிப்புக்குரிய ஐயா அவர்களின் திருவுருவச் சிலையை இந்து மதாபிமான சங்கத்தார் அமைப்பது அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இந்து மதம், சைவம், தமிழ் இவற்றில் பேரன்பு பூண்ட கண்ணியமும், கண்டிப்பும், கனிவும், கருணையும் மிகுந்த உயர்திரு தமிழ்க்கடல், சிவம் பெருக்கும் சீலர் போல் தூய்மையும் வாய்மையும் நேர்மையும் கொண்ட உத்தமர்கள் நினைவுக்கு ஏற்ற அஞ்சலி இது. திருவுருவச் சிலை திறப்பு விழாவின் சார்பாக வெளியிடவிருக்கும் மலர் அவர் உகக்கும் அருள் மலர்கள் கொண்ட மாலையாக அமையட்டும். உயர்திரு ராய. சொ. அவர்கள் நினைவு நம் அகத்தில் எப்போதும் ஒளிரட்டும். தங்கள் பணிகள் சிறக்க எங்கள் வாழ்த்துக்கள்.

L. ALAGUSUNDARAM CHETTIAR

5, Vallabhai Road,
MADURAI-625 002.

# வாழ்த்துரை

முன் காலத்தில் பல தமிழ் நூற்கள் கடலால் கொள்ளப் பட்டன. தன்னுல் அழிந்துபோன தமிழ் நூற்களுக்சப் பதிலாகப் புதிய நூற்களைத் தரவேண்டுமெனக் கடல் நினைத்தது. உப்புநீர்க் கடல் இனிப்பான தமிழ்நூற்கடலாக மாறி அமராவதி புதூரில் தோன்றிக் காரைக்குடியில் இருந்து கருத்து முத்துக்களையும் கவிதை அமுதத்தையும் வாரி வழங்கியது. அந்தக் கடல்தான் தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனர் அவர்கள்.

தேவாரத்தில் திளைத்த நெஞ்சம் அவர்களைச் சிவம் பெருக்கும் சீலராக்கிற்று. காந்தி மகான் மீது மதிப்புக் கொண்ட மனம், காந்தி பிள்ளைத்தமிழ் பாடிவைத்தது. இந்து மதாபிமான சங்கத்தின் மேல் அவர்களுக்கு இருந்த ஆதரவு "இராய சொ. உமையாள் மண்டப"மாக மலர்ந்தது. கம்பனையும் வில்லியையும் ஆராய்ந்து, அங்கே சிவபெருமான் பெருமைகளைக் கண்ட தமிழ்க் கடலார் ஆன்மா சொக்கலிங்கப் பெருமான் திருவடிகளில் இணைந்து மனம் பரப்புகிறது. அவர்கள் உருவச்சிலை திறப்பதும், அவர்கள் நினைவாக மலர் வெளியிடுவதும் நாம் அவர் பணிக்குக் கைம்மாருகக் காட்டவேண்டிய அடையாளங்கள் ஆகும். விழாச் சிறப்புறவும், மலர் மணம் பரப்பவும் இறைவன் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறேன். பல பெருஞ்செல்வர்களைத் தமிழின்பால் ஈடுபாடு கொள்ளச் செய்த தமிழ்க்கடலார் திருப்பணி, இன்றைய இளைய தலைமுறைக்கு வழிகாட்டியாகத் திகழட்டும்.

O. RM. M. SP. SV. AN.
ANNAMALAI CHETTIAR

Founder President
Sevugan Annamalai College,
DEVEKOTTAI.

பேரன்புடையீர்,

இந்து மதாபிமான சங்கத்தை வளர்த்த அமரர் தமிழ்க் கடல் இராய. சொக்கலிங்கனுர் தமிழ்ப்புலமையும், மிகுந்த சமயப் பற்றும் உடையவர். அவர்களின் உருவச்சிலை திறப்பு விழாவும் அவ்விழாவில் அவர்களின் நினைவாக மலர் ஒன்றும் வெளியிடுவது கண்டு மகிழ்கிறேன்.

ஷ விழா சிறப்புடன் நடைபெற வாழ்த்துகிறேன்.

ஓம்

வள்ளல் 5—1—84

**நா. ரெங்கசாமிபிள்ளை**
34, மார்க்கெட் ஸ்டிரீட்,
பினங்கு.

# வாழ்த்து

அமரர், தமிழ்க்கடல், சிவமணி, ராய. சொ. அவர்களுக்கு, திருவுருவச் சிலை நிறுவி, 22—1—84 திறப்பு விழாச் செய்ய ஏற்பாடு செய்திருப்பதறிந்து மிக மகிழ்வு கொண்டேன்.

மதிப்பிற்குரிய ராய. சொ. அவர்கள் சிறந்த தேசத் தொண்டும், தமிழ்த் தொண்டும் செய்தவர்கள். நாட்டுக்காக உழைத்தவர்களை எண்ணி நன்றி கூறும் இந்து மதாபிமான சங்கத்தலைவராகிய தங்களுக்கும், மற்றும் நிர்வாக அங்கத்தினர்கள் அனைவருக்கும் எனது தாழ்மையான வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.



T. புருஷோத்தம முதலியார்
Ex. M. L. C.

திருவல்லிக்கேணி
சென்னை-5.

# வாழ்த்துரை

தமிழ்க்கடல், இராய. சொக்கலிங்கனார் அவர்களுக்குக் காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தார், திருவுருவச் சிலை நிறுவும் செயல் பாராட்டிற்குரியதாகும்.

நான் காரைக்குடி நகரசபை ஆணையராகப் பல ஆண்டுகள் தொடர்ந்து பணி புரிந்திருக்கிறேன். 1938-ஆம் ஆண்டில் காங்கிரஸ் கட்சியின் சார்பில் நகரசபைக்கு விண்ணப்பம் தாக்கல் செய்த இருபது பேர்களும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள் என்ற அறிவிப்பை வெளியிடும் பேறு பெற்ற மகிழ்ச்சி இன்றளவும் என் மனதை விட்டு நீங்கவில்லை. காங்கிரஸ் கட்சி யானது ஸ்தல ஸ்தாபனங்களைக் கைப்பற்ற முடிவு செய்த முதல் முயற்சியில் காரைக்குடியில் தான் 20 காங்கிரஸ் அங்கத்தினர்கள் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பெற்ற செய்தி அனைத்திந்தியாவிலும் பாராட்டப் பெற்றது. 1938 முதல் 1941 வரை தமிழ்க் கடல், இராய. சொ. நகரசபைத் தலைவராக இருந்த காலத்தில் நான் ஆணையராக இருக்கும் பேறு பெற்றேன். இராய. சொ. தலைமைப் பொறுப்பேற்ற காலம் நான்கே நான்கு தொடக்கப் பள்ளிகள் காரைக்குடியில் இருந்தன. அவர் பதவிக் காலத்தில் 17 ஆரம்பப் பள்ளிகளாகப் பல்கின. ஊரினை அழகு படுத்தும் கருத்துடன் முதல் திட்டமாகத் தெருவிளக்குப் போடும் திட்டம் நன்கு செயலாக்கம் பெற்றது. நீலரச விளக்குகள் வீதி தோறும் நிலவுபோல் ஒளிவீசத் தொடங்கின. நகரசபைக்குரிய அலுவலகமாக 'காந்தி மாளிகை' கட்டப்பெற்றது.

இராய. சொ. அவர்கள் நாள்தோறும் அலுவலகம் வந்து செயலாற்றுவதும், நகர் நலங்கருதி என்னுடன் கலந்து ஆலோசிப்பதும், வாரம் ஒரு முறை வார்டுகளுக்குச் சென்று குறைகளைக் காண்பதும், கூட்டத்தில் குறிப்பிடும் செய்திகளைக் குறித்து அதிகாரிகளுடன் முன்னரே கலந்தாலோசிப்பதும், நகரசபைக் கூட்டத்தை மிகவும் சாதுரியமாகவும், சமாதான

மாகவும், கண்டிப்பான முறையிலும், கால அளவு நீடிக்காமல் நடத்தி முடிப்பதும் அவருடைய நிர்வாகச் சிறப்புக்களாகும்.

அவர்கள் தலைவராக வந்த முதல் ஆண்டில் நகரசபை ஊழியர்களுக்குக் கதராடை வழங்கும்படி ஆணையிட்டார்கள். அன்று முதல் இன்று வரை நானும் கதராடை அணிந்து மகிழ்கின்றேன்.

நிர்வாக முறையில் ஆணையராக இருந்த என்னை அன்புடன் அரவணைத்து, காரைக்குடி நகரத்தில் நல்ல பல திட்டங்களை நிறைவேற்றி வைக்க என்னுடன் ஒத்துழைத்த பெருமகனார்.

தேசபக்தியிலும் சமூக சீர்திருத்தத்திலும், இறை பணியிலும், இலக்கியப்பணியிலும் படிப்படியாக ஈடுபட்டு உயர்ந்த உன்னதமான நிலையை அடைந்த பெருமகனார் சிவமணி, சிவம்பெருக்கும் சீலர், வண்கவி வள்ளல், தமிழ்க்கடல், இராய. சொக்கலிங்கனார் நினைவுக்கு அன்னாரின் திருவுருவச் சிலை காரைக்குடியில் அமைந்திருப்பது செட்டிமார் நாட்டுக்கே ஒரு சிறப்பாகும்.



# "சரித்திரம் முடிந்தது"

புலவர் மணி – நா. மீனவன்.

காவிரிப் பெருக்கை வெல்லும்
கம்பனின் பாட்டுக் குள்ளே
ஆவியை வைத்து மூவர்
ஆக்கிய தேவா ரத்துள்
தேவியை இடத்தில் வைத்த
தேவனை மனத்தில் வைத்து
பூவெனும் நெஞ்சை அன்னான்
பொன்னடி மீது வைத்தாய்

வள்ளுவம் இராம காதை
வருநள வெண்பா தூது
கள்ளெனும் கவிசொல் வில்லி
கற்பனை நைட தத்தேன்
எள்ளலில் சேக்கி ழார்செய்
இனியநூல் வாச கத்தேன்
உள்ளமாம் சிறையி லிட்ட
உன்புகழ் இமயம் ஐயா!

மங்கலத் திங்கள் தோறும்
மனைவிக்காய் விரதம் காத்து,
திங்களாம் கிழமை அன்று
தில்லையான் பாதம் கண்டு
பொங்கிய அன்பி னாலே
போயினன் இறைய டிக்கே
சங்கமே உனது மாடிச்
சரித்திரம் முடிந்த தம்மா.

## ராய. சொ. உமையாள் மண்டபம் திறப்பு விழா



இடமிருந்து : கம்பன் அடிப்பொடி, ப வ. ராம. குழந்தையன் செட்டியார், கருமுத்து தியாகராசன் செட்டியார், அ. மு. மு. முரு. வள்ளியம்மை ஆச்சி, ராதா தியாகராசன், அ.மு.மு. முருகப்ப செட்டியார், தமிழ்க்கடல், ராய.சொ , சி.வி.சிடி. வெங்கடாசலம் செட்டியார்

உ
சிவமயம்

தேவாரம் பாடித் தினம்சிவனை வழிபட்டு
நாவாரத் தமிழ்சொன்ன நம்ராய சொக்கலிங்கர்
பூவாரும் திருவடிகள் போற்றும் அபிசீனியா
நாவன்னா தொண்டதனை நாள்தோறும்
போற்றுகிறோம்.



நல்லெண்ணம்!

நல்லொழுக்கம்!!

நற்படிப்பு!!!

பூ. அமிர்தலிங்கன்

காரைக்குடி.
'அறிவகம்'

காந்தீயச் சுடரொளி : ராய. சொ.வுக்குக்
கவிஞர்கோ இட்ட

# காணிக்கைப் பாமலர்

கண்ணனுக்குத் தொல்விதுரன் விருந்து வைத்தான்;
கலியுகத்தில் காந்திமகான் தமைய ழைத்துத்
தண்காரைக் குடிநகரில் தனது வீட்டில்
தமிழ்விருந்து படைக்கும்நற் பேறு பெற்ற
புண்ணியனே! காந்தியினைப் பிள்ளை யாக்கிப்
புதுப்பிள்ளைத் தமிழ்படைத்த புலமைக் கோவே!
வெண்ணீறும் வெண்கதரும் துலங்க வாழ்ந்த
விண்மதிசேர் தமிழ்க்கடலே! வணக்கம் வாழ்க!

ஒப்பரிய திருக்குறளின் தத்து வங்கள்
உயர்காந்தி வாழ்க்கையிலே ஒளிர்தல் நோக்கிச்
செப்பரிய இலக்கணமும் இலக்கி யம்போல்
திகழ்ந்தவற்றை ஆராய்ந்து, வெண்பா யாப்பில்
வைப்புநிதி எனவைத்த வள்ளால்! உன்றன்
வாழ்நாளில் காந்தியினை மறந்த துண்டோ?
கைப்புடைய சிறையினிலும் மகாத்மா மீது
கவிபுனைந்த காந்தீயச் சுடரே! வாழ்க!

உவமையிலா முருகப்பர் தம்மைக் கூடி
உயர்இந்து மதாபிமான சங்கம் கண்டு
தவமணியாம் பாரதியின் பாடல் பெற்ற
தமிழ்ச்சங்கம் உயர்ந்தோங்க மாடி கட்டி
நவநவமாய்ப் பொருள்திரட்டி மனைகள் வாங்கி
நாள்தோறும் தமிழ்முழக்கம் செய்து வாழ்ந்த
சிவமணிக்குச் சிலையெடுத்த சங்கத் தார்கள்
சிவனருளால் பல்லாண்டு வாழ்க! வாழ்க!

# கவிராய சொக்கலிங்கர்

( சௌந்தரா கைலாசம் )

கவிராய சொக்கலிங்கர்! கண்ட துண்டு மேடையிலே!
செவிகுளிரக் கேட்டென்றன் சிந்தை மகிழ்ந்ததுண்டு!
வியன் தமிழ்க் கடலெங்கள் வீட்டிற்கும் வந்ததுண்டு!
விண்ணவரும் தாம்ஏங்க விருந்தெமக்குத் தந்ததுண்டு!
தமிழ்கேட்கச் சிலமனிதர் தம்மெதிரே இருந்துவிட்டால்
சிந்தையிலே தங்கிவரும் தமிழ்வெளியே தாவிவரும்!
பொங்கிவரும் முன்னாலே புன்னகையாம் பூப்பூக்கும்!
ஒருநல்ல பாட்டென்பார் ஒன்றன்பின் ஒன்றாக
மணிமணியாய்ப் பாட்டுதிரும்! மனமெல்லாம் கேட்டுருகும்
வாய்திறந்து ராய. சொ. வசனத்தைச் சொன்னாலும்
கவிதைச் சுகம்கிடைக்கும்! கலைஞன் திறமையது!
சுவையுள்ள கவியெடுத்துச் சொல்லத் துவங்கிவிட்டால்
அவைமுழுதும் நல்ல அமைதி அரசாளும்!
உடல் தளர்ந்த நேரத்தும் உள்ளத்தில் ஊறுதமிழ்க்
கடல்குறைந்த தாகஎன்றன் காதில் விழுந்ததில்லை!
வில்விட்ட அம்பும் அணைவிட்ட நீரும் அவர்
சொல்தொட்டா போகும்? சுருண்டு விழுந்துவிடும்!
எப்பொழுதும் அவர்சொல்லில் ஈடற்ற வேகமுடன்
ஒப்பில்லாச் சுவையிருக்கும்! உலகறிந்த உண்மையிது!
தமிழே உருவானார்! தமிழே உயிரானார்!
தமிழே அனைத்துமெனத் தாரணியில் வாழ்ந்திருந்தார்!
இன்றைக்கு வாழ்கின்ற எல்லார்க்கும் உள்நினைவில்
நின்று தமிழ்விளக்கும் நிகரற்ற செங்கதிரோன்!
பாமாலை சூட்டிப் பைந்தமிழைக் கண்டார்க்குப்
பூமாலை போட்டுப் போற்றி வணங்கிடுவோம்.

# தமிழ்க்கடல்

கம்பராமன்

( S. K. ராமராசன் )

சந்தனப் பொதிய மால்வரை முகட்டில்
தவம்செயும் அகத்திய முனிவன்
சிந்தனைக் கெட்டா நூல்களை எல்லாம்
செழுங்கடல் விழுங்கிய தென்று
வந்தவர் கூறக்கேட்டனன் ; அந்தோ ;
வளமையார் தத்துவ நூல்கள்
முந்துமா மறைகள் ; வானியல் நூல்கள்
முடிந்தவோ ! முடிந்தவோ ! என்ருன்.

காரண முறையைக் காரிய நிலையைக்
காணும்நூல் ; உலகெலாம் அளக்கும்
ஏரண நூல்கள் அழிந்தவோ ! என்ருன் ;
எய்தினுன் தென்கடல் மருங்கில் ;
ஆரணம் பயின்ற நாவினுல் கடலே
அருகுவா என்றனன் ; நடுங்கி
வாரணம் வந்து திருவடி மலரில்
மணிசொரிந் தொதுங்கிநின் றதுவால்.

கடலினைக் கண்ட முனிவரன் வெகுண்டு
கண்களில் தீப்பொறி பறக்க
அடலுறு கரத்திற் புனலினை எடுத்தான்
ஆணவம் ஒடுங்கிடும் சபிப்பேன் ;
திடமொழிப் பேன்யான் என்றனன் ; கேட்ட
செழுங்கடல் சரண்சரண் என்ன
வடவைநேர் சீற்றம் ஒடுங்கினன் ; சான்ருேர்
வன்சினம் கணத்தொடுங் கிடுமால்.

ஆற்றலார் கடலே! வடமொழி யணங்கும்
அறிவினைப் பெறப்பொலி நூல்கள்
ஏற்றம தறியா தழித்தனை ! சரணம்
என்றதால் பொறுத்தனன்; நீபோய்
ஊற்றமார் நகர வணிகர்தம் குலத்தில்
உத்தம னுகுக; உண்ட
தேற்றமார் நூலை இடம்தொறும் பகர்க!
சிங்கம்போல் முழங்குக! நன்றே

வாணியும் நினது நாவினில் இருப்பாள் ;
வண்டமிழ்க் கவிதையுன் வளத்தைக்
காணியாய்க் கொள்ளும் ; நின்மொழி கேட்டுக்
கற்களும் வெண்ணெயாய் உருகும் ;
நீணிலந் தன்னில் மன்னன்போ லிருப்பாய் ;
நின்றிருப் பாவினிற் பொலிய
மாணுறு சொற்கள் நின்றன்முற் றத்தே
வரங்கிடந் துன்முகம் பார்க்கும்.

நந்தலில் நூல்கள் அழித்ததால் சிறைஅய
நண்ணுவை ; அக்கொடும் சிறையைச்
சந்தமார் மதுரைச் சங்கமாய் மாற்றித்
தலைமையிற் பொலிகுவை ; உலகே
வந்தனை செய்யும் ஒப்பிலா ஒருவன்
வந்துன்றன் இல்லத்தில் தங்கி
முந்திய விதுரன் பெற்றஇன் பத்தை
முறைமையால் வழங்குவன் ; உயர்வாய்.

இன்றுமுன் றன்னை யளந்தறிந் தவர்கள் ;
இல்லை;நீ தமிழ்க்கட லாகும்
அன்றுமுன் புலமை அளந்தறி பவர்கள்
அகிலத்தில் இல்லை; நான் கூட
நின்றனைக் கண்டு வியப்பினை யடைவேன் ;
நின்னுப்பால் வருந்திய நாவும்
வென்றிகொள் நினது கவிதையைப் பயின்று
மேன்மைசால் தேனிப்பை அடையும்.

தண்டமிழ் நூல்கள் அனைத்தையும் உண்ட
சால்பினுல் இனிமையே வடிவாம்
வண்டமிழ்க் கடலாய்ப் பொலிகுவை; தெய்வ
வாணியின் தவத்திஞல் உதித்துத்
திண்டிறற் கவிதை புனைபவ ஞலே
சிறப்பிக்கும் பேற்றினைப் பெறுவாய்;
மண்டலந் தன்னில் வேந்தரும் பணியும்
மாண்பினை எய்துவை நன்றே.

என்றனன் புகழ்சால் அகத்தியன்; கேட்ட
இருங்கடல் அவன்கழல் பணிந்து
நன்றறி முனியே நின்றிரு வாயால்
நவின்றது சாபமா? வரமா
என்றறி யாது திகைத்தனன்; என்றே?
யியம்பிய திந்தநுட் பத்தை
ஒன்றிய வுள்ளத் தறிந்தசான் ஞேர்கள்
உலகினில் பெரியவர் அம்மா.

ரெ. முத்துக்கணேசன்
காரைக்குடி

# இராய. சொ. புகழ்கள் வாழ்க!

பொன்னொளிசேர் ஞாயிறெனப் பொலிவுடையன்;
புன்சிரிப்பன்; சிவந்த மெய்யன்;
நன்மதிபோல் வெண்ணீறு துலங்கொளியாய்
நலந்திகழும் நெற்றி யாளன்;
மன்னுலகில் இந்துமத மறைவளர
வளர்சங்கம் காந்து வந்தோன்;
தென்தமிழ்க்கோர் கடல்இராய சொக்கலிங்கன்
திருப்புகழ்கள் நீடு வாழ்க!

உண்மையினை மந்திரமாய் உணர்ந்திங்கு
வாழ்ந்திட்ட காந்தி தானைத்
திண்மையுறப் பரவியவர் புகழையெலாம்
தீந்தமிழில் நூல்கள் பாடிப்
பெண்மைபோல் பித்தாகி அவர்நெறியைப்
பிடித்தொழுகும் தகைமை யாளன்;
மண்விளங்க விடுதலைக்குச் சிறைசென்ற
மாண்புடையன் தொண்டு வாழ்க!

வந்துலகில் தோன்றுமுயிர் வாழ்விலெலாம்
உடனுறைந்து, துன்பம் நீக்கி
அந்தமிலாப் பேரின்பம் அளித்திங்குக்
காக்கின்ற சிவனை எண்ணிச்
சிந்தைதனில திருமுறையோ டைந்தெழுத்தை
இசைத்திங்கு செபமே செய்யும்
தந்தையவன் 'சிவமணியாம்' சொக்கலிங்கன்
திருப்பூசை நலங்கள் வாழ்க!

## அமரர் தமிழ்க்கடல் – இராய. சொ. சிலை திறப்பு விழாவில் பாடியது

### கருப்பட்டிக் கவிராயர்

அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

திருமணமும் கலைமணமும் திகழ்காரை வளநகரில்
பெருவணிகன் இராயப்பன் பெற்றெடுத்த தவமகனும்,
எழுபிறப்பும் தொடர்ந்துவரும் எண்எழுத்தாங் கல்வியினைப்
பழுதறநன் கிளமைமுதல் படித்துணர்ந்த முதுபுதல்வன்
இந்தியத்தாய் விடுதலைக்கே ஈடில்லாப் பணிசெய்து
முந்துபுகழ்க் காந்திநெறி முன்நடந்த ஒருதலைவன்

பொங்குதமிழ்க் கடல்திளைத்துப் பொன்மணிகள் பலதொகுத்துச்
சங்கையறத் தெளிந்தெடுத்துத் தங்கமெனும் கருத்திழைத்துத்
துங்கமுறும் கற்பனையாம் சுடர்மெருகிட்டு அணியமைத்து
மங்கலமாத் தமிழ்த்தாய்க்கு மகிழ்ந்தணிந்த பெருங்கவிஞன்

இலக்குணர்ந்த நாயன்மார்கள் இறையுணர்ந்த ஆழ்வார்கள்
இலக்கியத்தின் ஒருமையினை இனியசுவைத் தெள்ளமுதாய்
இலக்கணத்தின் விதிவழியே எழுத்தறிந்து சொற்பொருளைப்
புலக்கணகம் நனிவிரும்பப் பொழிந்துவந்த பெருவள்ளல்

காலத்தால் உடல்மூத்தான் கருத்தொடுசொல் இளையவனும்
சீலத்தால் சிவம்பெருக்கும் சிவனடியார் வலம்வந்த
ஆலயங்கள் தொழுதுவந்தான் ஆழ்வார்கள் உளங்கவர்ந்த
கோலத்தாள் தினம்பரவும் குறிப்புடைய மெய்யடியான்.

அரசியல் துறையினில் அருந்தமிழ் உலகினில்,
தெரிவரும் பணிபல தெளியச் செய்தவன்,
பொருள்பொதி கட்டுரை புதுமுறை எழுதியே,
மருளற விளக்கியுள் மகிழ்ந்த மாண்பினன்,

மதிநலந் ததும்பிய மதுகை மனத்தினன்,
புதிதெனும் சுவைதரு பொருவில் பேச்சினன்,
துதிகொளும் புலமொளி துலங்கும் மெய்யினன்,
கதுமெனக் கனிநிகர் கவிகள் காட்டினன்,

காந்திவழி நின்றவன் காண் ; கதருடையே கொண்டவன் காண்;
சாந்திநிலை கண்டவன் காண் ; சமரசநோக்கு உற்றவன் காண்;
சிவனைமனம் வைத்தவன் காண்; திருமாலைப் போற்றினன் காண்;
சிவத்தலங்கள் சுற்றினன் காண்; சிவனடியே அடைந்தவன் காண்;

பண்பன் காண்; கவிஞன் காண்; பழையன் காண்; புதியன் காண்;
நண்பன் காண் ; கலைஞன் காண்; நாதன் காண்; நல்லன் காண்;
அன்பன் காண்; அறிஞன் காண்; ஐயன் காண்; மெய்யன் காண்;
இன்பன் காண்; புலவன் காண்; இனியன் காண்; வீரன் காண்;

என வாங்கு

இன்னல்பல் சிறப்பின் மன்னிய பெருமகன்
சொக்க லிங்கனின் தக்கநற் புலமைசால்
தோற்றப் பொலிவை ஏற்ற வண்ணம்
நின்ற நிலையில் என்றும் காணக்
கலையொளி காட்டும் சிலையில் வடித்துத்
திறக்க வைத்துச் சிறப்புச் செய்தவர்
அனைவரின் பணியை மனமுவந்து வாழ்த்துவன்
கற்பக மூர்த்தியின் பொற்பதம் பணிந்தே.

# பொலிந்து வாழ்க

("பொற்கிழிக் கவிஞர்" "காசிஸ்ரீ" **அரு. சோமசுந்தரன்**)

அருந்தமிழை இளமைமுதல் கற்ற தூயன்
ஆண்மையுடன் சீர்திருத்தம் செய்த செல்வன்
நறுந்தமிழின் வளர்ச்சிக்கே உழைத்த நல்லோன்
நாளெல்லாம் புகழ்ராய **சொக்க லிங்கன்**
விருந்தளிக்க மேடையிலே ஏறி விட்டால்
விரிகடலே தமிழ்க்கடலாய் விளங்கு மன்றே!
பொருந்தியநற் றமிழ்நெஞ்சும் நாவும் கொண்டே
பொன்னியெனப் பொழிகின்றோய்! பொலிந்து வாழ்க!

முன்னாளில் அரசியலில் மூச்சாய் நின்று
முத்தமிழும் சிவமதமும் வளர்த்த சான்றோய்!
பின்னாளில் தமிழுக்கே வாழ்க்கை என்று
பிறவெல்லாம் துறந்துபணி செய்து வாழ்வோய்!
தன்னேரில் முருகப்பா குழுவி னோடு
தமிழ்மண்ணில் சீர்திருத்தம் பலவும் செய்தோய்!
என்னேநின் மொழியாற்றல் சொல்லின் ஆற்றல்!
எந்தமிழின் சுவைபோல இனிது வாழ்க!

1966 ஏப்ரலில் பொன்முடி பதிப்பகம் வெளியிட்டுள்ள " கவிஞர் சோமசுந்தரன கவிதைகள் " என்ற நூலில் இக்கவிதைகள் இடம் பெற்றுள்ளன.

# மொத்தத் தொகை தானே ?

கவிஞர் அழ. அண்ணாமலை

விளம்பியாண்டின் வெள்ளிப் பணமே தமிழ்க்கடலார்
விளம்புதற்கே பிறந்தமகன் வேறாண்டில் பிறப்பாரா?
ராயப்பா இவர்தந்தை இராப்பகலாய்க் காத்துவரும்
தாயப்பா அழகம்மை தமிழப்பா இவர்வாழ்க்கை
அய்யரிடம் தமிழ்கற்றார் அப்பரிடம் சுவைபெற்றார்
மெய்யரிடம் மனம்வைத்தார் மெய்யன்பர் தினம்மொய்த்தார்
தாயாகிச் செந்தமிழைத் தாங்கிவளர்த்த மேலாளர்
ராய. சொ. புன்னகையில் இராமன் உலாவருவான்
ஆழ்வார்கள் தமிழ்க்கடலாம் அய்யாவின் வாயசைவில்
வாழ்வார்கள் பொய்யில்லை வந்தவர்கள் தொழுவார்கள்
கட்டுத் தொகைபார்க்கக் கணக்கைத் தொடும்போதும்
எட்டுத் தொகைநூலே இவர்க்கு நினைவுவரும்
திக்கி வெளியாகும் தேவாரம் இவர்வாயில்
சொக்கி விழுமழகு சொக்கலிங்கப் பேரழகு
ஊரின் இடைவெளியில் ஒருகாண்டம் அரங்கேறும்
காரில் இருந்தபடி காப்பியமே நிறைவுபெறும்
உள்ளுவதும் சொல்லுவதும் உமைபங்கன் பேரைத்தான்
அள்ளுவதும் பூசுவதும் அம்மையப்பன் நீறைத்தான்
அஞ்செழுத்தும் ஆறெழுத்தும் அன்னைத் தமிழெழுத்தும்
நெஞ்செழுத்தாய்ப் பெற்றதனுல் நெஞ்சழுத்தம் பெற்றமகன்
அடிக்கல்லாய் இருந்தமகன் அபிமான சங்கத்தின்
படிக்கல்லும் பேர்சொல்லும் பாரதியின் சீர்சொல்லும்
காதி இவராடை காங்கிரஸ் இவர்மேடை
ஆதித் தமிழ்வாடை அத்தனையும் பூக்கூடை
அன்னைத் தமிழ்ப்பெண்ணே அவதாரம் எடுத்தாளோ?
முன்னைப் புலவோரின் மொத்தத் தொகை தானோ?

**ம. பொ. சிவஞானம்**
தலைவர்
தமிழ்நாடு சட்டமன்ற மேலவை

புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை-600 009.
*14—1—1984.*

தேசீயப் பற்றுக்கும் தமிழ்ப் பற்றுக்குமிடையே உறவு ஏற்படுத்திய பெருமை மகாகவி பாரதியாருக்கு உண்டு அவரைப் பின்பற்றி அந்த உறவை வளர்த்து வந்தவர்களிலே, பாரதி காலத்தவரான காரைக்குடி ராய. சொக்கலிங்கம் செட்டியார் முதன்மையானவராவார்.

அவர் அழுத்தமான நாட்டுப்பற்றுளர்; சுத்த காந்தீயவாதி; ஆழ்ந்த தமிழ்ப் புலமையிலே அவருக்கு இணை அவரேதான்! தமிழ் இலக்கியங்கள் அடங்கிய நூலகத்தைத் தேடிப் போக வேண்டிய தில்லை. ராய. சொ. வை அணுகி, எந்த நூலிலிருந்து எந்தச் செய்யுளைக் கேட்டாலும் மறுகணமே எழுத்துப் பிழையின்றி கூறுவார். நல்ல எழுத்தாற்றலையும் பேச்சாற்றலையும் பெற்றிருந்தார். அதனால், "தமிழ்க் கடல்" என்று அழைக்கப்பட்டார்.

கம்பரை நினைக்கும்போது காரைக்குடி நகரம் நினைவுக்கு வருமளவுக்கு அந்த நகருக்குப் பெருமை தேடியவர்களிலே ராய. சொக்கலிங்கனும், சா. கணேசனும் முன்னணியில் நிற்கின்றனர்.

ராய. சொ. அவர்கள் சிறந்த கவிஞருமாவார். கவிதை இலக்கியங்கள் பலவற்றைப் படைத்துள்ளார். "காந்தி பிள்ளைத் தமிழ்" என்னும் சிற்றிலக்கியம் வேறு எவரும் படைக்காத புத்திலக்கியமாகும். காந்தியடிகளிடம் அவருக்கிருந்த அழுத்தமான பற்றுதலை இந்த இலக்கியத்திலே காணலாம்

ராய. சொ. அவர்கள் வயதில் என்னைவிடவும் மூத்தவர். ஆயினும், என்பால் உள்ள அன்பு காரணமாக, சமநிலையில் என்னிடம் பழகி வந்தார். அவர் சற்று முன்கோபி என்பது அவருடன் பழகியவர்களுக்குத் தெரியும். என்னளவில் அவருடைய கோபத்தைச் சந்திக்க எனக்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டதே இல்லை. அந்த அளவுக்கு நாங்கள் நெருங்கிப் பழகினோம்.

நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் எங்களைப் பிணைத்து வைத்த சக்திகளாகும். இன்னமும் அந்தப் பெரியாரை நினைக்கும் போது அவர் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்ற எண்ணமே தோன்றுகிறது.

காரைக்குடி மக்கள் திரு. ராய. சொ. அவர்களுக்கு திருவுருவச் சிலை நிறுத்த முன்வந்தது, எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. அத்தகைய ஒரு சிலையைப் பெறுவதற்கான தகுதி அப்பெரியாருக்கு உண்டு.

செட்டி நாட்டு மக்களிடம் மிகுந்த செல்வாக்குடையவரான செய்தி-அறத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்களைக் கொண்டு ராய. சொ. அவர்களின் திருவுருவத் சிலையைத் திறந்து வைப்பது, பொருத்தமுடையதாகும்.

இந்த உருவச் சிலையானது, நாட்டுப் பற்றையும் மொழிப்-பற்றையும் நேசிப்பதற்கு தமிழினத்தின் வருங்காலத் தலைமுறை-யினருக்கு வழிகாட்டுவதாக இருக்கும்.

வாழ்க, "தமிழ்க் கடல்" இராய. சொ. அவர்கள் புகழ்!

# வாழ்த்துரை

**நா. மகாலிங்கம்,** பொள்ளாச்சி

காரைக்குடியில் இயங்கும் இந்து மதாபிமான சங்கத்தில் அமரர் தமிழ்க் கடல் இராய. சொக்கலிங்கனார் அவர்களின் திருஉருவச் சிலை திறப்பு விழா நிகழ்வது பெருமகிழ்ச்சியைத் தருகிறது.

தமிழ் நாட்டில் இந்து மதாபிமான சங்கம் தனிச்சிறப்பு பெற்ற சங்கம் ஆகும். ''திண்மையுறும் இந்து மதாபிமான சங்கம்'' என்று மகாகவி பாரதியார் போற்றிய பெருமையுடையது இந்தச் சங்கம்.

இந்தச் சங்கம் சமய நூல்களையும், இலக்கிய நூல்களையும், பதிப்பித்திருக்கிறது. சங்கம் சார்பாக 'வாசக சாலை' ஒன்றை அமைத்து மக்களிடையே நூல்களைப் படிக்கும் பழக்கத்தை உருவாக்கியிருக்கிறது. தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்யும்படி பணிபாற்றி வருகிறது.

மகாகவி பாரதியார் வாழ்த்திய காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தை வளர்த்த தமிழ்ப் பெரியோர்களில் தமிழ்க் கடல் ராய. சொக்கலிங்கனார் குறிப்பிடத்தக்க மேன்மை உடைய பெருந்தகை.

இராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்கள் பற்றியும் திருக்குறள் போன்ற நீதி நூல்கள் பற்றியும், நாயன்மார், ஆழ்வார் சமயப்பாடல்கள் குறித்தும் பல நூல்களை எழுதிய தமிழ்ப் பேரறிஞர்.

நூலாசிரியர் மட்டும் அல்லர்; தலை சிறந்த சொற் பொழிவாளர். காரைக்குடியில் கம்பன் புகழ் வளர்க்கும் கம்பன் கழகத்துக்கு உறுதுணையாயிருந்து பணியாற்றிய ஒப்பற்ற தமிழ்த் தொண்டர். எல்லாவற்றுக்கும் மேலாக இராய. சொக்கலிங்கனார்

அவர்கள் சிறந்த தெய்வ பக்தர். வழிபாட்டு உணர்வில் வற்ருத ஆர்வம் உடையவர். தினந்தோறும் சிவபூஜை செய்து, திருமுறைகள் ஓதும் வழக்கம் உடையவர்.

காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தின் வரலாறும், தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கஞர் வரலாறும் ஒன்றுள் ஒன்று கலந்தவை என்ருல் அது மிகையாகாது.

இவ்வளவு பெருமை உடைய அமரர் இராய. சொக்கலிங்கஞர் திருவுருவச் சிலேயை, அவர்கள் தொண்டால் வளர்ந்த இந்துமதாபிமான சங்கத்தில் திறந்து வைப்பது பெரிதும் பாராட்டுதற்கு உரியதாகும். நன்றி மறவாத பண்பிஜன நாடறியச் செய்யும் திருத்தொண்டாகும்.

அமரர் இராய. சொக்கலிங்கஞர் திருவுருவச் சிலே திறந்து வைப்பதுடன் அவர்களின் சமயம், கலே இலக்கியம், வாழ்க்கை, வரலாறு கொண்ட கட்டுரை, கவிதைகளே தொகுத்து 'நிஜனவு மலர்' வெளியிடுவதும் போற்றத்தக்கது.

திருவுருவச் சிலே திறப்பும், நிஜனவு மலர்ச் சிறப்பும் இந்து மதாபிமான சங்கத்தின் விழாவிற்கு ஒளியாய்த் திகழ்கின்றன. சங்கத் தலேவர், செயலாளர் அனைவருக்கும் என் மனங்கனிந்த பாராட்டுகளேத் தெரிவித்துக்கொள்கிறேன.

காரைக்குடி இந்து மதாபிமான சங்கம் நடத்தும் இராய. சொக்கலிங்கஞர் திருவுருவச் சிலே திறப்பு விழா-நிஜனவு மலர் வெளியீடு பொங்கும் இன்பமோடும், பொலிவோடும் திகழ அருட் பெருஞ் ஜோதியைப் பிரார்த்திக்கிறேன்.

வாழ்க இந்து மதாபிமான சங்கம்!

# தமிழ்க்கடலின் காந்தீயம்

டாக்டர். **வ. சுப. மாணிக்கம்** பி. எச்டி: டி. லிட்டு,

"காந்தியடிகளை ஒத்தவர் உலகில் எவரும் இலர் என்பது என் கருத்து. காந்தியடிகள் வாழ்ந்த காலத்தில் இருந்தமைக்காக நான் பெருமைப்படுபவன். அப்பெரியார் என்குடிலுக்கு எழுந்தருளினர் என்பதில், கண்ணபிரானை வரவேற்ற விதுரனைப்போல் பெருமகிழ்வு பூத்தவன் நான்"

இவ்வாறு தமிழ்க்கடல் இராய. சொ. தாம் பெற்ற பிறவிப் பயனைப் பெருமிதமாக எழுதியும், "கடவுள்நிலை பெற்ற காந்திப் பெருமான்' என்று தெய்வமாகப்பாடியும் உள்ளார்.

தமிழ்க்கடலார் காந்தியடிகளின் கொள்கையெல்லாம் தம் வாழ்விற் பொய்யாது பின்பற்றியவர்; அடிகளாரைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றித் தன்னை அடியவனாகக்கொண்டு தொழுது காந்திப் பாசுரம் பாடியவர்; தம் எழுத்துக்கும் சொல்லுக்கும் காந்தியைப் பாடற் பொருளாகக் கொண்டவர்.

இராய. சொ.வின் காந்திக்கவிதை என்ற பெருநூல் தமிழில் இன்றெழுந்த புதிய நற்படைப்பாகும். பொருள் யாப்பு கற்பனை சுவை நடைகளால் புதிய மரபு கண்ட உயர்நூலாகும். திருமுறைகள் போலவும் பிரபந்தங்கள் போலவும் இப்படைப்பினைக் காந்திப்பாசுரம் என்று போற்றலாம். இவ்வகையில காந்திப்புலவர் என்ற தனி முதற் பெருமைக்கு உரியவர் தமிழ்க்கடல்.

காந்தீயம் என்பது என்ன? கொல்லாமை பொய்யாமை என்ற இரு பண்பும் இணைந்த கால்பியம். இதன் விளக்கமாக, தீண்டாமை யொழிப்பு சாதியின்மை சமய வொற்றுமை கள்ளுண்ணாமை உடைமையின்மை என்ற செயற்பாடுகளைக் காந்தியடிகள் பரப்பினர். மேலும் இவற்றின் சின்னமாகக் கைராட்டினத்தையும் கதரையும் சுட்டினர்.

காந்தியாரின் அடிப்படைச் சிந்தனையையும் வெளிப்படைச் செயல்களையும் நன்குணர்ந்த தமிழ்க்கடல் அவற்றைத் தம்

வாழ்விலும் மேற்கொண்டு இலக்கிய வாயிலாகவும் பரப்பிவந்தார். பரப்பிய இலக்கிய முறைகளைக் காந்திக்கவிதை நமக்கு அறிவூட்டிக்கொண்டு நிற்கின்றது.

கொல்லாமை பொய்யாமை கொள்கையா எங்காந்தி
வல்லாளன் கொண்டதெவன் வள்ளுவரே—சொல்வேங்கேள்
ஒன்ருக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

இவ்வெண்பாவில் நாணயம் போன்ற காந்தீயத்தின் இருபக்கங்களை வள்ளுவர் சிந்தனையோடு பிணைத்துக்காண்கிருர். இராம. சொ. திருக்குறளின் விளக்கமே அடிகளார் வாழ்க்கை என்று காந்தியும் வள்ளுவரும் என்ற நூல் 125 செய்யுட்களில வடித்துக் கொடுக்கின்றது.

காந்திப்பெருமகன் இந்தியாவிற்கு விடுதலை அருளினவர் எனினும், இவ்விடுதலை வரவு அவர்தம் வாழ்வு நோக்கமன்று. நம் நாடு அடிமைப்பட்டதற்கு என்ன காரணங்களோ அவை நீக்கப்படவேண்டும் என்பது அவர்தம் முழுப்பார்வையாகும். சாதிப்பூசலும் தீண்டாமையும் சமயப்பிணக்கும் அறவே ஒழிய வேண்டும் எனவும் இவை ஒழியாத விடுதலைப் பாரதம் மீண்டும் அடிமைக்குழி புகும் எனவும் உணர்ந்தவர் காந்தி. அண்ணலாரின் சிந்தனை எதிர்வினைத் தெளிந்த தமிழ்க்கடல் இம்முத்தீமைகளைப் பற்றியும் அழுத்தமான தமிழ் நடையில் கண்டித்துப் பாடுவாராயினர்.

''புந்தியின்றி நில்லாத உடல்கொண்டு நான்பெரியன
சாதியினில் நீ கீழ் என்ன நிலையறியாது உழல்கின்ருர்
''தொட்டால் முழுகித் தொலைத்திடும் குடியெனும்
வெட்டிய பேச்சை வீண்செய லோடு
வெட்டுக காந்தி''
''இந்துமுசல் மான் வேற்றுமை யென்னும்
கொடிய பிணி இறந்து பட்டோட''

இங்ஙனம் சாதி தீண்டாமை சமயச்சண்டைகளைப் பல செய்யுட்களில் இடித்துச்சாடி வாழ்க்கைக் காந்தியத்தை எதிர்கால

மக்களும் உணரப்பாடினுர் பல்லாயிரம் பாடல்களை மனப்பாடமாகக் கொண்ட தமிழ்க்கடலார். காந்தீயத்தின் அனைத்துச் சிந்தனைகளுக்கும் உணர்ச்சிக் களஞ்சியமாக விளங்குவது காந்திக் கவிதை.

உடைமை உடையான் என்ற பொருட்கொள்கை தவறு; பொருட்கு நாம் காப்பாளர்களே, உரிமையாளர்கள் இல்லை என்பது காந்தியின் செல்வக்கோட்பாடு. "கடல்சூழ் காசினியில் காரியம் ஆற்றத் தகுபொருள் தவிரக்களவே மற்றது" என்று இச் சிந்தனையை எடுத்துக்காட்டினுர் இராய. சொ. எடுத்துக் காட்டிய தோடன்றி, தாம் பல்லாண்டு தொகுத்து இராமபாணம் புகாது அட்டைக் கவசம் அணிந்து காத்த நூல்களையெல்லாம் அழகப்பா கல்லூரிக்கு வழங்கினுர். மேலும் தம் அமராவதிச் சொத்தினைத் தன்னை வளர்த்த, தான் வளர்த்த, இந்துமதாபிமான சங்கத்தின் திருப்பணிக்கு நன்கொடையாக்கினுர். காந்தியடிகள் போலவே சொத்திலாத் தமிழ்க்கடலாகவும் தனக்கென்று எதுவுமில்லை, தான் என்பதும் இல்லை என்ற இராய. சொ.வாகவும் வாழ்ந்து காட்டினுர். எல்லாம் காந்தி மயமாக செம்மேனி எம்மாணுக ஒளிபெற்றவர் காந்தி ஆண்டு கண்ட தமிழ்க்கடல்.

# அமரர் ராய. சொவும்

## அரசியல் வாழ்க்கையும்

RV. சுவாமிநாதன், M.P.

தமிழ்கடல், தேசபக்தர் திரு. ராய. சொக்கலிங்கனுர் அவர்கள் தேச விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டு தியாகம் செய்த பெரும் தேச பக்தராவார். 1929ம் ஆண்டு முதல் ராய. சொக்கலிங்கனுர் அவர்களிடம் நெருங்கி பழகும் வாய்ப்புக் கிடைக்கப்பெற்றேன். இது 1929ம் ஆண்டு நான் காங்கிரஸ் மகா சபையில் சேர்ந்த சமயம் நான் அறிந்தவரை 1925ம் ஆண்டு முதலே ராய. சொ. அவர்கள் காங்கிரஸ் மகா சபையில் சேர்ந்து தொண்டு செய்யலானுர்கள்.

"ஊழியன்" என்ற வாரப்பத்திரிகை ஒன்றை காரைக்குடியில் நடத்தி வந்தார்கள். "ஊழியன்" காங்கிரஸ் செய்தியை பரப்புவதில் முன்னனியில் நின்றுகொண்டிருந்தது.

அத்துடன் ஊழியன் இலக்கியத் துறையிலும் ஈடுபாடு கொண்டிருந்தது. அந்த காலத்தில் வாரத்தில் இரண்டு, மூன்று தினங்கள் எனது கிராமமாகிய பாகனேரியில் இருந்து காரைக்குடி சென்று "ஊழியன்" அலுவலகத்தில் ராய. சொ. அவர்களைச் சந்தித்து காங்கிரஸ் வேலைகளைப் பற்றிப் பேசுவேன். அப்போது "ஊழிய"னில் கட்டுரைகளும் காவியங்களும் எழுதுவதில் பல பெரியோர்கள் முன்னின்ருர்கள். அவர்களில் பி. ஸ்ரீ., வ. ரா., தி. ஜா. ரா. தி. ம. நடராஜன் போன்ற பெரியோர்கள் குறிப்பிடத் தக்கவர்கள் இந்த பெரியோர்களுடன் பழகும் வாய்ப்பும் எனக்கு கிடைத்தது. திரு. சிதம்பரம்பிள்ளை என்ற நண்பரும் ஊழியன் அலுவலகத்திற்கு வருவது வழக்கம். இவர் பின்னர் சிங்கப்பூர் சென்று அங்கு நிரந்தரமாக தங்கிவிட்டதாக கேள்வி.

திரு. ராய. சொ. அவர்கள் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தலைவராக பல ஆண்டுகள் தொடர்ந்து இருந்து காங்கிரஸ்

ஸ்தாபன வேலைகளை கவனித்து வந்தார்கள். அப்பொழுது இருந்து ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் உபதலைவராக பல ஆண்டுகள் ராய. சொவுடன் தொண்டு செய்யும் வாய்ப்பு எனக்கு கிடைத்தது.

1930 முதல் 1932 ஆரம்பகால மத்தி வரை சிவகெங்கை பகுதியில் காங்கிரஸ் பிரச்சாரமும் போராட்டமும் பலமாக நடைபெற்று வந்தது. இராஜாஜி அவர்கள் கைதானவுடன் தலைவர்கள் பலரை தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் சர்வாதி காரியாக நியமித்தார்கள். அதில் என்னை ஐந்தாவது சர்வாதி காரியாக நியமித்தார்கள். எனவே நான் ராய. சொ. அவர்களை சந்தித்து சிவகெங்கையில் சத்யாக்கிரகம் செய்யும்படி வேண்டிக் கொண்டேன். அவர்களும் ஒப்புக்கொண்டு ராய. சொ. அவர்கள் சிவகெங்கையில் கைதாகி ஒருவருடம் சிறைத்தண்டனை பெற்றார்கள். பிறகு நானும் கைதாகி ஒருவருட தண்டனை பெற்றேன். ராய. சொ. அவர்களும் நானும் வேலூர் சிறைச்சாலையில் எங்கள் தண்டனைக் காலத்தைக் கழித்தோம். சிறையில் ராய. சொ. அவர்கள் இருந்த அறைக்குச் சென்று அவர்களை அடிக்கடி சந்திப்பேன். அப்போது அவர்கள் தங்கியிருந்த அறையில் ஏராளமான தமிழ் இலக்கிய நூல்கள் இருப்பது கண்டு ஏது நீங்கள் கூடிய சீக்கிரம் பெரும் புலவராகி விடுவீர்கள் என்று கூறுவேன்.

சிறையில் சந்திக்கும் நண்பர்களுடன் ராய. சொ. அவர்கள் என்னை அறிமுகம் செய்யும் போது எங்கள் செட்டிநாட்டுப் பகுதியில் நாட்டார்-நகரத்தார் என்று இரண்டு பெரும் சமுதாயங்கள் உண்டு. நகரத்தார் சமுதாயத்தில் அவரும் நாட்டார் சமூகத்திற்கு சுவாமிநாதனும் சிறை வந்துள்ளோம். இதன் மூலம் இருவரும் எங்கள் சமூகங்களின் மதிப்பையும் பெருமையும் நிலை நாட்டியுள்ளோம் என்று ராய. சொ. அவர்கள் கூறுவது இன்றும் எனது காதில் ஒலித்துக் கொண்டிருக்கின்றது.

1936ம் வருஷம் ராமனுதபுரம் ஜில்லாவில் நடைபெற்ற ஜில்லா போர்டு தேர்தல் ஒரு சுதந்திர போராட்டம் போல் நடை பெற்றபோது ராய, சொ. அவர்கள் ஜில்லா காங்கிரஸ் தலைவராக

இருந்து எல்லா தொகுதிகளிலும் காங்கிரஸ் அபேட்சகர்களை நிறுத்தி தேர்தல் வேலை செய்தார்கள். அப்போது அதிகாரத்தில் இருந்த ஜஸ்டிஸ் கட்சியும் போட்டியில் குதித்தது.

பிரிட்டிஷ் ஆட்சியின் போலீஸ்காரர்களுக்கும் ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களுக்கும் காங்கிரஸ்காரர்களுக்குமிடையே ஒவ்வொரு நாளும் நடைபெற்ற பெரும் போராட்டம் நம் பகுதி மக்கள் அறிந்த ஒன்ருகும்.

திரு. ராய. சொ. அவர்கள் சிறையில் இருந்து வந்த பின்னர் "ஊழியன்" வாரமலரை காரைக்குடியில் இருந்து சென்னைக்கு எடுத்துச் சென்று நடத்தி வந்தார்கள். பின்னர் இலக்கிய துறையில் ஆர்வம் காட்டிய ராய. சொ. அவர்கள் தமிழக புலவர்களில் ஒருவராக திகழ்ந்து தமிழ் கடல் என்று நண்பர்களால் அன்புடன் அழைக்கப்பெற்று பெருமையுடன் மதிக்கப்பட்டார்கள்.

அமரர் ராய. சொ. அவர்கள் என்றும் நம் மனதில் குடி கொண்டிருக்கிருர்கள்.

வாழ்க! ராய. சொ. நாமம்

ஜெய் ஹிந்த்!

சங்கத்தின் பொன்விழாவில், அறிஞர் அண்ணா
அவர்களிடம், டாக்டர் ராஜா சர் மு. அ.
முத்தையா செட்டியார் அவர்கள் பொன்விழா
மலரை அளிக்கும் காட்சி



நடுவில் தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள்

இடதுபக்கம் : கலைத்தந்தை கருமுத்து.
தியாகராசன் செட்டியார்

வலதுபக்கம் : அபிசினியா பழ. நாச்சியப்பன்

சங்கத்தின் பொன்விழாவில்
அறிஞர் அண்ணா அவர்கள் சிறப்புரையாற்றுதல்



இடமிருந்து:

டாக்டர். ராஜா சர் மு. அ. முத்தையா செட்டியார்
கலைத்தந்தை கருமுத்து தியாகராஜன் செட்டியார்

# இலக்கிய மேடையில் இராய. சொ.

(ம. அ. முருகேசன் ; முன்னுள் மாவட்ட நீதிபதி.)

எனது ஞானத் தந்தையார் தமிழ்க்கடல் ஐயா அவர்களுடன் எனக்கு நேரடித் தொடர்பேற்பட்டதே ஈரோடு இலக்கிய மேடையில் தான். தமிழ்க்கடலாகவும், நூலாசிரியராகவும், சிவம்பெருக்கும் சீலராகவும் அவரை அறிந்த நம்மில் பலருக்கு, அவர் தேசியவாதியாகவும், சிறந்த தேசபக்தராகவும் வாழ்ந்த வாழ்வு மறந்து போயிருக்கலாம். இன்றைய இளந்தலைமுறையினருக்கு அது தெரிந்துகூட இருக்காது. நாடு விடுதலையடைவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பு, என்னுடைய மாணவப் பருவத்தில் ஐயா அவர்களைப் பழுத்த காங்கிரஸ்காரராகக் கண்டும், அனல்பொறி பறக்கும் அவருடைய ஆவேச சொற்பொழிவுகளைக் கேட்டும் நான் மயங்கிப் போனதுண்டு. அந்நாளில் நான் அவரை அணுக்கத்தில் கண்டதில்லை. நாடு விடுதலையடைந்த பிறகும் அவரை நான் தொலைவிலிருந்தே கண்டுவந்தேன். அவர் பதிப்பித்துச் சிலரின் கண்டனத்துக்கும் உள்ளான "விறலி விடு தூது" என்ற நூலையும் படித்து ரசித்தேன்.

மேலும் பல ஆண்டுகள் கழித்து, நான் ஈரோட்டில் நீதித் துறையில் பணியாற்றிய போதுதான், ஐயா அவர்களை இலக்கிய மேடையில், அணுக்கத்தில் சந்திக்கும் வாய்ப்புப் பெற்றேன். நாடு புகழ் நல்ல தமிழ் அறிஞர்கள் கம்பராமன், க. கு. கோதண்டராமன், பேராசிரியர் இராதாகிருஷ்ணன் ஆகியவர்களுடன் பல இலக்கிய மேடைகளில் ஐயா அவர்களைத் தொடர்ந்து கண்டும், பழகியும் பெரும் பயனடைந்தேன். அந்நாள்களில் அவர்கள் பெரும்பாலும் சமய இலக்கியத்தைப் பேசிவந்தார்கள் ; பட்டிமண்டபங்களில் தலைமையேற்றுப் பேருரையாற்றி வந்தார்கள்.

கம்பனுடைய காவியத்திலும், திருமுறைகளிலும், ஆழ்வார் பாசுரங்களிலும், திருவிளையாடல்புராணம் போன்ற பிறநூல்களிலும்

ஐயா அவர்களுக்கிருந்த ஆழ்ந்த புலமையை அவருடைய இலக்கியச் சொற்பொழிவுகளைக் கேட்ட எவரும் உணர்ந்திருப்பர். அவருக்கே உரிய முறையில் பாடல்களைச் சொல்லி பொருள் விளக்கம் செய்வார்கள். அதைத் 'தமிழ்க்கடல் பாணி' என்றே அழைக்கலாம். சொற்பொழிவாளர்கள் பாடல்களைத் தவருகச் சொன்னுலோ படிக்காமல் வந்து 'கதை' பண்ணினுலோ பொறுக்க மாட்டார்கள். தன்னுடைய தலைமை உரையில் அதைக் கண்டித்து அறிவுறுத்துவார்கள். பட்டிமண்டபப் பேச்சாளர்கள் சொன்ன வற்றையும், சொல்லாமல் விட்டவற்றையும் அழகுபடத் தொகுத்துச் சொல்லுவார்கள். அதற்கெல்லாம் அவருடைய பரந்த படிப்பும், ஆழ்ந்த நுண்ணறிவும், நினைவாற்றலும் கைகொடுத்து வந்தன. பட்டிமண்டபங்களிலே, நன்ருகப் படித்தவர்களுக்கு ஐயா அவர்களுடைய தலைமை பெருங்கொண்டாட்டம்; படிக்காதவர் களுக்கு அது திண்டாட்டம். இன்னும் விளக்கமாகச் சொல்லப் போனுல், கற்றறிந்தவர்கள் அவருடைய தலைமையை நன்ருக படித்த மாணவன் தேர்வை விரும்புவது போல விரும்புவார்கள். அவர் தலைமை வகித்து நடாத்தும் பட்டிமண்டபங்களின் தரமே தனிதான். தரங்கெடுவதையோ, காலங்கடப்பதையோ ஐயா அவர்கள் ஒருபோதும் அனுமதிக்க மாட்டார்கள்.

ஐயா அவர்கள் அலங்கரித்த எத்தனையோ இலக்கிய மேடைகள் என் நினைவில் இன்றும் நிற்கின்றன. "ஈரோடு இலக்கியப் பேரவை"யில் பல ஆண்டுகள் திருமுறைகளையும், கம்பன்காவியத்தையும்பேசியிருக்கிருர்கள். "ஐயா இல்லாமல் ஈரோடு இலக்கியப் பேரவை விழா இல்லை" என்றே பலகாலம் இருந்தது. ஐயா அவர்களுக்கும் ஈரோடு தமிழ் அன்பர்கள்மீது அளவிலாத அன்பு. ஈரோடு இலக்கியப் பேரவை விழாவுக்காகவே, பம்பாயில் தன் நிகழ்ச்சிகளைச் சுருக்கிக்கொண்டு பறந்து வந்திருக்கிருர்கள்.

'பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணம் மதுரையின் தலபுராணமே; என்று மதுரை அங்கயற்கண்ணி ஆலயத்தில் ஒரு முறை முழக்கினுர்கள். கேட்டிருந்த மதுரை வாசிகளே கிறு கிறுத்துப் போய்விட்டார்கள். சிலமாதங்கள் கழித்து, என்னுடைய வேண்டுகோளுக்கிணங்க, பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணத்தில் "மதுரைக் காண்டத்திற்கு குறிப்புரை எழுதி அழகிய

முறையில் பதிப்பித்துத்தந்தார்கள். அந்த நூலை மதுரை அங்கயற்கண்ணி ஆலயத்தார் வெளியிட்டு மகிழ்ந்தார்கள். அந் நூல் வெளியீட்டு விழாவில், வாரியார்சுவாமிகள், வாகீசகலாநிதி கி. வா. ஜ, தவத்திரு சுந்தரஅடிகளார் ஆகியவர்கள் கலந்து கொண்டு நூலைப் பாராட்டினர். அன்றும் ஐயா அவர்கள் பரஞ் சோதியாரின் புலமையைக் காட்டி அரியதொரு சொற்பொழி வாற்றினுர்கள். பின்னுளில், திருக்கருவைப் பதிற்றுப் பத்தந் தாதியை, பால்லண்ணநாதர் திருக்கோயிலுக்காகப் பதிப்பித்து உதவினுர்கள். அந்நூல் வெளியீட்டு விழாவிலும், அந்நூலின் நயங்களைக் காட்டி அரியதொரு சொற்பொழிவாற்றினுர்கள். இது போல், நகரத்தார் வீடுகளில் நடந்த மங்கல விழாக்களில் ஐயா அவர்கள் பலநூல்களை வெளியிட்டு "ஞானதானம்" செய்து இருக்கிருர்கள்.

ஐயா அவர்களின் "நினைவாற்றல்" வியக்கத் தகுந்தது. இலக்கிய மேடைகளில் அது அவர்களுக்குப் பெரிதும் கைகொடுத்து உதவியது. பல ஆண்டுகளுக்கு முன் மனனம் செய்த பாடல்களையும் பதம் பிசகாமல் சொல்லுவார்கள். 'எது சரி' என்ற கேள்வி எழுந்த போதெல்லாம் ஐயா அவர்களுடைய வார்த்தையே சரியாகஇருக்கும். சொல்லாட்சியையும் பொருளாட்சியையும் எந்த நூலிலிருந்தும் காட்டுவார்கள். ஒரு நிகழ்ச்சி என் நினைவில் பசுமையாக நிற்கிறது. திருஇராமேச்சுவரத்தில் ஒரு நிகழ்ச்சிக்குப் போயிருந்தோம். ஆலயத்தில் வழிபாடு செய்தபோது, "கோடி மாதவங்கள் செய்து குன்றினுர் தம்மையெல்லாம்" என்ற நாவுக்கரசர் பாசுரத்தை ஓதுவா மூர்த்திகள் உணர்ச்சியுடன் படித்தார். ஐயாவும் நானும் உடனிருந்தவர்களும் கேட்டு உருகிப் போனேம். வழிபாடு முடிந்து இருப்பிடம் வந்த போது, அந்தப் பாசுரத்தில் "வீடலே சக்கரத்தால் எறிந்து" என்று வருவதை சுட்டிக்காட்டி, "பாசுரம் பிழையாக இருக்கிறது; இராவணனை இராமன் அம்பு தொடுத்து அழித்ததாகத்தானே இராமாயணம் சொல்லுகிறது," என்று சொன்னேன். ஐயா அவர்கள் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. ஆனுல் மாலையில் நடந்த சொற்பொழிவில் தங்குதடையில்லாமல், என் ஐயத்தைச் சுட்டிக்காட்டி, "நாவுக்கரசர் ஆதாரமில்லாமல் சொல்லமாட்டார்; கம்பனும் அப்படித்தான் சொல்லுகிருர்," என்று சொல்லி

'' அக்கணத்தின் அயன்படை ஆண்தகை
சக்கரப் படையோடும் தழீஇச் சென்று,
புக்கது, அக்கொடியோன் உரம் ; பூமியும்
திக்கு அனைத்தும் விசும்பும் திரிந்தவே ''

என்ற கம்பனது பாடலையும் சொன்னார்கள். இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகளைச் சொல்லமுடியும். விரிவஞ்சி இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன். தம்வாழ்நாளில், தமிழ்க்கடல் அவர்கள் இலக்கிய மேடையின் தனி நாயகனாக, பிதாமகனாக பிஷ்மராக விளங்கினார். கண்டவர்களும் கேட்டவர்களும் பேறு பெற்றவர்கள். அடியேனும் அப்பேறு பெற்றேன்.

சைவ சித்தாந்தச்செல்வர், சொக்கலிங்க ஐயா
அவர்களின் திருவுருவப்படம்.
ஸ்ரீ மீ. சு. உயர்நிலைப்பள்ளியில்
திறப்புவிழாச் செய்தபோது



தலைமை வகித்த தமிழ்க்கடல் சிவமணி ராய.சொ.
இடதுபுறம் தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள்
சிவதீட்சை பெறவும், சிவபூசை எடுத்துக்
கொள்ளவும் நன்முயற்சி செய்த நண்பர்,
சைவசித்தாந்த சிவபூசைச் செல்வர்
முத்த.வெ. சொக்கலிங்கஞ்செட்டியார்

# தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களின் திருமுறைத் தோய்வு

(புலவர்மணி— சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினம் செட்டியார்)

இளமைக் காலத்தில் தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள் இலக்கியச் சுவையிலேயே பெரிதும் ஈடுபட்டு இருந்தார்கள். வயது ஏறஏறத் திருமுறைகளில் அவர்கள் உள்ளம் சென்றது. நகரத்தார் மரபில் பிறந்தவர்களுக்கு இஃது இயல்பே ஆகும். பிற்காலத்தில் திருமுறைகளில் தமிழ்க்கடலுக்கு இருந்த ஈடுபாடு சொல்லும் தரமன்று.

வடமொழி மந்திரங்களைச் சொல்லாமல் திருமுறைப் பாக்களையே ஓதித் திருவாசகத்தைத் தீட்சா மூர்த்தமாக எடுத்துத் தந்தால் சிவதீட்சை பெற்றுக்கொள்வதாக ராய. சொ. அவர்கள் சொன்னார்கள். அக்காலத்தில் பிரபல தீட்சா குருவாக விளங்கிய பழநி ஈசான சிவாசாரியார் இதற்குச் சம்மதித்தார். உத்தரகோச மங்கையில் திருவாசக நூலையே மூர்த்தமாக எடுத்துக் கொடுத்து ராய. சொ. அவர்களுக்குத் தீட்சை செய்வித்தார். சிலகாலம் திருவாசக பூஜையே நடைபெற்று வந்தது. ஒருநாள் அந்த நூல் எப்படியோ காணுமல் போய்விட்டது. சிவலிங்க பூஜை எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான் அது காணுமல் போயிருக்கிறது என்று அன்பர்கள் சொன்னார்கள். அவர்கள விருப்பத்திற்கிணங்கிச் சிவலிங்க தீட்சையை ராய. சொ. அவர்கள் பெற்றுக் கொண்டார்கள். பூஜையில் முழுக்க முழுக்கத் திருமுறைப் பாக்களையே ஓதுவார்கள் வடமொழி மந்திரம் ஓதுவது அவர்களுக்குப் பிடிக்காது. திருமுறைப் பாக்களை அவர்கள் கணீரென ஓதி மலர் தூவும்போது பார்ப்போர் உள்ளம் பரவசம் அடைந்துவிடும்.

திருவாசகப் பாடல்கள் அனைத்தும் தமிழ்க்கடலுக்கு மனப் பாடம்; ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், பாடல்களில் பெரும் பாலானவை அவர்களுக்குப்பாடம். பெரியபுராணத்தில் செய்பாதிக்கு மேல் மனனம் செய்து வைத்திருந்தார்கள். திருமந்திரம்,

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பதிஞேராந்திருமுறை முதலிய வற்றிலும் அவர்களுக்கு ஏராளமான பாடல்கள் மனப்பாடமாக இருந்தன.

கூட்டங்களில் திருமுறைகளைப் பற்றிப் பேசும் போது பாட்டை அரைகுறையாகச் சொல்லாமல் முழுதும் சொல்லி அதன் பொருளைச் சிறுபிள்ளைகள் கூட விளங்கிக்கொள்ளும் வண்ணம் எடுத்துரைப்பார்கள்; பாடல் சொற்களைச் சந்தி பிரித்து அழுத்த மாகவும் தெளிவாகவும் சொல்வார்கள்; கேட்கும்பொழுதே பாதிப் பொருள் விளங்கிவிடும்; தோய்ந்து தோய்ந்து சொற்பொருளை விளக்குவார்கள். சொல்லுகின்ற பாடலுக்கு ஏற்ற பாடல்கள் வேறு திருமுறைகளில் வந்திருந்தால் அவற்றை எடுத்துக்காட்டாமல் விட மாட்டார்கள். சமய தத்துவங்களை அதிகமாகப் பேசமாட்டார்கள்; சமய அறங்களையும், ஒழுக்கங்களையும். நீதிகளையும், உலக இயல்பு களையும், இலக்கியச் சுவையோடு திருமுறைகளிலிருந்து எடுத்துக் காட்டிப் பன்முறை சொல்லிச் சொல்லித் தாமும் மகிழ்வார்கள்; பிறரையும் மகிழ்விப்பார்கள்.

திருநெல்வேலியில் சைவர் மாநாடு ஒன்று நடந்தது. அதில், "மங்கையர்க்கரசியார்" பற்றித் தமிழ்க்கடல் பேசினார்கள். ஞானசம்பந்தர் பாடி அருளிய,

"மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை, வரிவளைக் கைமடமானி,
பங்கயச் செல்வி பாண்டி மாதேவி"

என வரும் பாடலை எடுத்துக்காட்டி விளக்கினார்கள்; அதன்பின் அப்பாடலை அடியொற்றிச் சேக்கிழார் பெருமான் பாடி அருளிய,

"மங்கையர்க்குத்தனி அரசி எங்கள் தெய்வம், வளவர் குலத்
திருக்கொழுந்து வளைக்கை மானி, செங்கமலத் திருமடந்தை
கன்னி நாடாள்"

என வரும் பாடலை ஒப்பிட்டு இவ்விரு பாடல்களில் சேக்கிழார் பாடல் ஞானசம்பந்தர் பாடலை வென்றுவிட்டது என அடித்துச் சொன்னார்கள். ஞானசம்பந்தர். "மங்கையர்க்கரசி", என்று தான்

சொன்னர் சேக்கிழாரோ, "மங்கையர்க்குத் தனி அரசி என்று சொல்கிறர், "வளவர்கோன் பாவை" அதாவது "சோழன்மகள்" எனச்சம்பந்தர் சொல்வது மிகச் சாதாரணமாக இருக்கிறது; சேக்கிழாரோ" வளவர் குலத் திருக்கொழுந்து" என்று அருமையாகச் சொல்லி இருக்கிறர்; வேரின் பலம் முழுதும் கொழுந்தில்தான் தெரியும்; "கொழுந்து" என்ற சொற்பிரயோகத்துக்கு எத்தனை ஆயிரம் பொன் கொடுத்தாலும் தகும்; "பங்கயச் செல்வி" என்பதற்கும் "செங்கமலத் திருமடந்தை" என்பதற்கும் சுவையில் நிறைய வேறுபாடு உண்டு; "பாண்டிமாதேவி" என்றால், "பாண்டியன் மனைவி என்னும் அளவில் தான் பொருள் தரும். "கன்னிநாடாள்" என்றால் பாண்டிய நாட்டுக்கே அவள் உரியவள் என்னும் பொருள் தரும் இவ்வாறு பார்க்கும் போது ஞானசம்பந்தர் பாடலை அடியொற்றியதாக இருந்தாலும் சேக்கிழார் பாடல் உச்சநிலைக்குப் போய்விட்டது. என ராய. சொ. முழங்கினர்கள். அப்பொழுது திருநெல்வேலிச் சைவர் ஒருவர் எழுந்து நின்று, "ஞானசம்பந்தர் குரு முதல்வர்; அவர் பாடலைச் சேக்கிழார் பாடல் வென்றதாகச் சொல்வது சைவ மரபாகாது எனக் கூறினர். ராய. சொ. அவர்கள் புன்னகை பூத்தார்கள். சைவ மரபு எப்படி வேண்டுமானலும் இருக்கட்டும்; எனக்கு அதுபற்றிக் கவலை இல்லை; இரண்டு பாட்டையும் படித்துப் பாருங்கள். நான் சொல்வது சரியா? இல்லையா? என்பதை நெஞ்சில் கைவைத்துச் சொல்லுங்கள்; "குரு" என்ற தடையைப் போட்டுப் பாடலைபார்க்கக்கூடாது; கவித்துவத்தைத் தான் பார்க்க வேண்டும்" என மேசையைத் தட்டி உரமாகச் சொன்னர்கள். அங்கிருந்தோர் அனைவரும் கைதட்டி, ராய. சொ. அவர்களுக்குத் தம் ஆதரவைத் தெரிவித்தார்கள்.

"நாமார்க்கும் குடியல்லோம்" என்னும் அப்பர் பாடலை ராய. சொ. அவர்கள் மார்தட்டிச் சொல்வது; வழக்கம் பூமியில் எவர்க்கும் அடிமை செய்யோம்; பரிபூரணனுக்கே அடிமை செய்வோம்" எனப்பாரதி இப்பாடலை அப்படியே எடுத்து இந்திய உரிமைப் போராட்டத்துக்குப் பயன்படுத்தினன் என ராய. சொ. அவர்கள் பெருமிதத்தோடு சொல்வார்கள். இது பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறர்கள்.

பள்ளத்தூரில் சைவர் மாநாடு நடந்தது; திரு.வி.க. அவர்கள், "பெண்ணின் பெருமை" பற்றிப் பேசினார்கள் ; பண்டிதமணி கதிரேசச் செட்டியார் தலைமை தாங்கினார். ராய. சொ. அவர்களுக்குத் திரு. வி. க. இடத்தில் பெருமதிப்பு ; அவரைத் தம் குரு என்றே சொல்வார். திரு. வி. க. அவர்கள் பேசும்பொழுது சுந்தரர் தேவாரத்தில் வரும்,

"இறைகளோடு இசைந்த இன்பம்; இன்பத்தோடு இசைந்தவாழ்வு

என்னும் பாடலை விளக்கினார், "சுந்தரர் இரு பெண்களோடு வாழ்ந்தார்; அவ்வாழ்க்கையை இறை வாழ்க்கையாகவே அவர் கொண்டார்; அதனால்தான் இறைகளோடு இசைந்த இன்பம் என்றும் அந்த இன்பத்தோடு கூடிய வாழ்க்கை என்றும் சுந்தரர் பேசுகிறார். இல்வாழ்க்கையை இறைவாழ்க்கையாகக் கொண்டால் அதனைவிடச் சிறந்ததவம் வேறில்லை; பெண்ணை வெறுக்காமல் பெண்ணோடு கூடிய வாழ்க்கையை இறை வாழ்க்கையாகக்கொள்ள வேண்டும்," என்று திரு. வி. க. அவர்கள் சொன்னார்கள். தலைமை தாங்கிய பண்டிதமணி அவர்கள் இதனைப் மறுத்துப் பின் வருமாறு பேசினார்கள்.

"இறைகளோடு இசைந்த இன்பம்" என்பதற்குத் திரு. வி. க. அவர்கள் சொல்லும் பொருள் பொருந்தாது; அப்பாட்டின் அடுத்த அடி, "பறைகிழித்தனைய போர்வை" என உடலின் சிறுமையைச் சொல்லி வாழ்க்கை நிலையாமையை உணர்த்துகிறது; ஈற்றடியில் "ஆரூர் அப்பனே அஞ்சினேனே" எனச் சுந்தரர் சொல்கிறார். "கடவுளோடு கூடிய வாழ்க்கை" என்றால் அதற்கு அவர் ஏன் அஞ்சவேண்டும்? இப்பாடல் வாழ்க்கை நிலையாமையைச் சொல்வதாகும். ஒரு பாட்டை முழுவதுமாகப் பார்க்க வேண்டும்; ஓர் அடியை மட்டும் எடுத்துக்கொண்டு பொருள் செய்யக்கூடாது; இங்கே "இறைகள்" என்பது இறைவனைக் குறிக்காது; "இறைகள்" என்றால் இறைப்பொழுதுகளை அதாவது கணப்பொழுதுகளைக்குறிக்கும். கணப்பொழுதுகளோடு கூடிய வாழ்க்கை உலகியல் இன்பம் கணப்பொழுதில் மாறக்கூடியது; "அவ்வாறு மாறும் இயல்பினதாக வாழ்க்கையைக் கண்டு நான் அஞ்சுகிறேன்" என்றுதான் சுந்தரர்சொல்கிறார். திரு.வி.க அவர்கள்

பெண்ணின் பெருமையையும் இல்வாழ்க்கையின் மேம்பாட்டையும் பற்றிச்சொன்ன அனைத்தையும் நான் ஒப்புக்கொள்கிறேன், அக் கருத்துக்களை நிலைநாட்டத் திருமுறைகளில் பல பாடல்கள் உள்ளன. ஆனால் இந்தப்பாடல் வாழ்க்கை நிலையாமையைச் சொல்லும் பாடலாகும். இதனை இல்வாழ்க்கையின் மேம்பாட்டிற்கு மேற்கோளாகக் காட்டுவது பொருந்தாது''.

பண்டிதமணி இவ்வாறு சொன்னதும் சபையில் சலசலப்பு ஏற்பட்டது. திரு. வி. க. ஆதரவாளர்கள் எதிர்த்தெழுந்தார்கள். உடனே ராய. சொ. அவர்கள் கையமர்த்தி, ''நான் திரு. வி. க. அவர்களிடம் கொண்டுள்ள மதிப்பை நீங்கள் அறிவீர்கள்; தமிழ் நாட்டுக் காந்திஅடிகளாகவே அவர்களை நான் கொள்கிறேன்; அவர்களின் தமிழ்ப்புலமை தனிச்சிறப்புடையது; ஆனால் இந்த இடத்தில் இந்தப் பாட்டிற்குப் பண்டிதமணி அவர்கள் சொல்லும் பொருள்தான் எனக்குப் பொருத்தமாகத் தோன்றுகிறது'' என்று சொன்னார்கள். தமக்குச்சரி எனத் தோன்றுவதைத் தமிழ்க்கடல் அவர்கள் எந்தத் தாட்சண்யமும் பார்க்காது வெளிப்படையாகவே சொல்லிவிடுவது வழக்கம். பூசி மெழுகி அவர்களுக்குப் பேசத் தெரியாது; ஒளிவு மறைவின்றி யார்க்கும் அஞ்சாமல் மனத்திற் பட்டதைச் சொல்லி விடுவார்கள்; அவர்களின் இலக்கிய உள்ளம் அப்படிப்பட்டது. திரு. வி. க. அவர்கள் எழுந்து, ''பண்டிதமணி அவர்கள் சொன்ன பொருளை ஏற்றுக்கொள்கிறேன்; ராய. சொ. அவர்களின் கபடமில்லாத நெஞ்சைப் போற்றுகிறேன்,'' என்று பகிரங்கமாக அறிவித்தார்கள். அவர்களின் பெருந்தன்மையைக் கண்டு அத்தனை பேரும் வியந்தார்கள். செருக்கற்ற தூய வாழ்வினராகிய தமிழ்முனி திரு. வி. க. அவர்களின் சிறப்பு அப்பொழுது குன்றின் மேல் இட்ட விளக்குப்போல ஒளிவீசியது.

ஒருநாள் ராய. சொ. அவர்களோடு நானும் காரைக்குடி அன்பர் சொ. அழகப்பச் செட்டியாரவர்களும் பேசிக் கொண்டிருந்தோம். அப்பொழுது, ''அப்பர் தேவாரம், இராமேச்சுரத்திருப்பதிகத்தில் தென் இலங்கை அரக்கர்களை ''வீடவே சக்கரத்தால்,'' அதாவது சக்கரப்படையைக்கொண்டு திருமால் சங்கரித்தார் எனச் சொல்லப் பட்டுள்ளது ; இராமர் பிரமாஸ்திரத்தால் தான் இராவணனைக் கொன்றார்; அப்பர், ''சக்கரம்'' எனச்சொல்வது சிந்தனைக்குரியதாக

இருக்கிறது; "ஆயுதப்பொதுமை", என ஒரு போலியான அமைதி வேண்டுமானால் கொள்ளலாம். என்று ராய. சொ. கூறினார்கள்.

சில நாட்கள் கழித்துப் புதுக்கோட்டையில் இராவணனைப் பற்றிப் பேசுமாறு எனக்குப் பணித்திருந்தார்கள். அதற்காகக் கம்பனைப் புரட்டிப் பார்த்தேன். இராமர் இராவணனை நோக்கிப் பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்தார் என்னும் அளவோடு கம்பன் நிறுத்தாமல், "அக்கணத்தில் அயன்படை சக்கரத்தோடு சென்றது" எனச்சக்கரத்தையும் சேர்த்துச்சொல்லியிருப்பது கண்டு வியந்தேன். பிரமாஸ்திரம் உலகை அழித்துவிடும்; அவ்வாறு நிகழாது தடுப்பதற்காக" வைகுண்டத்தில் இருந்த சக்கரம் தானே பாதுகாப்பாக உடன் சென்றது "என்னும் கருத்தில் கம்பன் இதனைக் கூறியிருக்க வேண்டும் என நினைத்தேன். தமிழ்க்கடலுக்குப் புதுக்கோட்டையிலிருந்து விவரமாகக் கடிதம் எழுதினேன். என் கடிதம் கிடைத்ததும் உடனே அவர்கள் பின்வருமாறு பதில் எழுதினார்கள்"—

"நீ எடுத்துக்காட்டிய கம்பன் பாடல் இதுவரை என் கவனத்துக்கு வரவில்லை; பாடலைப் படித்திருக்கிறேன்; ஆனால் அப்பொழுது என் சிந்தனையில் இது தோன்றவில்லை வான்மீகத்திலோ, வேறு இராமாயணங்களிலோ பிரமாஸ்திரத்தோடு சக்கரம் சென்றதாகச் சொல்லப்படவில்லை. அப்பர் சுவாமிகளுக்காகத்தான் கம்பன் இப்படிப் பாடியிருக்கிறான் என நான் நினைக்கிறேன். அப்பர் வாக்கு ஒரு போதும் பிழைபோகக் கூடாது எனக் கம்பன் கருதிச் சக்கரப்படையைச் சேர்ந்திருக்கிறான்; அப்பர் பாட்டில் கம்பனுக்கு இருந்த தோய்வு இதிலிருந்து தெரிகிறது. உலகைக் காக்கச் சக்கரம் பிரமாஸ்திரத்தோடு சென்றதாகக் கம்பன் முன்பு எவ்விடத்திலும் பாடவில்லை ; இந்திரஜித் பிரமாஸ்திரத்தை உபயோகப்படுத்திய போது உலகம் அழியவில்லை. இலக்குவன் இந்திரஜித்தின் தம்பி மீது பிரமாஸ்திரத்தைப் பயன்படுத்தித்தான் கொன்றான் ; அப்பொழுது உலகம் அழியவுமில்லை; சக்கரப்படை செலவுமில்லை; அப்பர் பாட்டில் சக்கரம் வருவதைக் கம்பன் கண்ணுற்றிருக்கிறான்; அதனை எங்கேயாவது ஓர் இடத்தில் நுழைக்க என்று வேண்டும் கருதியிருக்கிறான். இராவண சங்காரம்தான் இறுதிக்கட்டம். இதனைவிட்டால் வேறு இடம் இல்லை; எனவே அப்பர் வாக்கைப் பின்பற்றிக் கம்பன் இங்கே சக்கரத்தைப் புகுத்தியிருக்கிறான்".

தமிழ்க்கடலின் கடிதம் கண்டு பெருமகிழ்வு எய்தினேன். அவர்களுக்கு அப்பரிடத்தில் இருந்த ஈடுபாடு கம்பனுக்கு மேற் பட்டதாக இருக்கிறதென இதிலிருந்து கண்டு கொண்டேன்.

"தேவாரமணி" என்னும் தலைப்பில் ராய. சொ. அவர்கள் ஒரு தொகுப்பு நூல் வெளியிட்டிருக்கிறார்கள். அதில் தேவாரப் பாடல்களுக்குக் குறிப்புரை எழுதியிருக்கிறார்கள். திருவாசகத்தில் "தேன்" என்னும் சொல் வருகிறபாடல்களாகத் தொகுத்துத் "திருவாசகத் தேன்" எனப் பெயரிட்டு ஒரு தொகுப்பு நூல் வெளி யிட்டிருக்கிறார்கள். தமிழ்க்கடலுக்குத் தேன் உண்பதில் மிக விருப்பம்; திருவாசகத் தேனை அவர்கள் உண்டு உண்டு திளைத்து நின்றதில் வியப்பில்லை. தமிழ்க்கடலின் திருமுறைத் தோய்வு என்றும் நம் நெஞ்சில் நிலைத்து நின்று மகிழ்வூட்டும் என்பதில் ஐயமில்லை. அவர்கள் நாமம் என்றும் வாழ இறையருளை வேண்டு கின்றேன்.

# ஆழ்வார் அமுது பருகிய இராய. சொ.

புலவர் மணி நா. மீனவன்

" தமிழால் பெருமை பெற்றவர்கள் என்றும், இவரால் தமிழ் பெருமை பெற்றது என்றும் " உலகிற் பலர் சொல்லக் கேட்டதுண்டு. அதில் " இவரால் தமிழ் பெருமை பெற்றது " என்று சொல்லத் தகுந்த நிலையில் வாழ்ந்த பெருந்தகை, எந்தையார், தமிழ்க்கடல் இராய.சொ. அக்கடலின் இறுதி நாட்களில் அணுக்கத் தொண்டனாய் இருந்து கவிச் சுவைத் தென்றலை அனுபவித்த போழ்து மேனிசிலிர்க்கச் சிதறிய துளிகள் சிலவற்றின் சிறப்பினை 'அழ்வார்' அமுது பருகிய இராய சொ. எனுந்தலைப்பில் எழுதப் புகுகின்றேன்.

தோலாத முத்தமிழால் நாளும் இன்னிசைபாடிய தேவார மூவரின் திருப்பதிகங்கள், வாக்கும் மணிவாக்காய் வையம் பாராட்டும் மாணிக்கவாசகரின் திருவாசகம். வங்கக்கடல் கடைந்த மாதவனை வாயாரப் பாடிவரும் ஆழ்வார்தம் பாசுரங்கள் என இன்னோரன்ன இலக்கியங்கள் எல்லாமும் இதயத்தே சேர்த்த தமிழ்க்கடல் இராய. சொ. தேவாரத்திரு முறைகளையும் திருவாய் மொழியையும் தன் இருகண்களெனக் கொண்டிருந்தார். நிதியுடைய கொடைவள்ளல் நெஞ்சுருகித் தருவது போல அமுதச் சுவைசேர்த்து அவர் தொகுத்து அளித்த ' ஆழ்வார் அமுதின் ' அருஞ்சுவை என்றும் இனியது.

எந்த நூலில் எத்தொடர் வந்தாலும் அத்தொடர்க்கு இயைபான தொடர் வேறு நூலில் வந்திருப்பின் அதனை வெளிப்படுத்தும் ஆற்றல், பொருத்தமான சொற்களை வேறுபாடு தோன்றாவாறு புகுத்தல், எளிய விளக்கங்கள் என்றவகையில் இவர்தம் உரையோ எழுத்தோ அமைவது இவர்க்கே உரித்தான தனிப்போக்கு.

பெரியாழ்வார் தம் பாசுரத்தில் 'மல்லிகைவெண் சங்கு ஊதும் மதிள்அரங்கம் என்பதுவே' என்ற கற்பனை 'மல்லிகையே

வெண்சங்கா வண்டுத' என நளவெண்பாவிலும், ஆண்டாள் தம் திருப்பாவையில் 'தோற்றமாய் நின்ற சுடரே' என்பது போல் 'தோற்றச் சுடரொளியாய்' எனத் திருவாசகத்திலும் பொய்கை ஆழ்வார் பாடும் 'குன்றனைய குற்றம் செயினும்' என்பது போல் 'குன்றே அனயை குற்றங்கள்' எனத் திருவாசகத்திலும், பூதத் தாழ்வார் பாடும் 'யானே தவம் செய்தேன்' என்பது போல் நானேயோ தவம் செய்தேன்' எனத் திருவாசகத்திலும் 'யானே தவமுடையேன்' எனக் காரைக்காலம்மையார் பதிகத்திலும் திருமங்கை ஆழ்வார் பாடும்' வாசி வல்லீர் இந்த ஶ்ரீர் வாழ்ந்துபோம் நீரே' என்பது போல் 'வாளாங் கிருப்பீர் வாழ்ந்து போதிரே' எனச் சுந்தரர் பதிகத்திலும்" வருகிறதெனச் சைவ இலக்கியங்களோடும் பிற இலக்கியங்களோடும் ஒப்புமை காட்டும் திறத்தில் தமிழ்க் கடலார் வித்தகர் என்பதை இதன் மூலம் அறியலாம்.

தொண்டரடிப் பொடியாழ்வார் பாடிய 'ஊரிலேன் காணி இல்லை' என்ற பாசுரத்தில் மூன்றாம் வரியான 'கார் ஒளி வண்ணனே' என்ற வரியில் ஒரு சீர் குறைந்து அறுசீர் ஆசிரிய விருத்த ஓசையினைக் குறைப்பது கண்ட இராய சொ "ஆழ்வார் தவறாக எழுதியிருக்கமாட்டார் அதனை ஏட்டில் பிரதி செய்தோர் விட்டிருக்கலாம். அதனோடு 'என்' என ஒருசொற் சேர்த்தால் 'கார்ஒளி வண்ண னேஎன்' எனச் சீர் ஒழுங்கு பெறுகிறது. எனக் கூறி 'ஆழ்வார் அமுது' என்ற தொகுப்பில் மாற்றிப் பதிப்பித்தார்கள். அவ்வாறு ஏதேனும் சொல் பழைய நூல்களில் இருக்கிறதா? எனப்பல இடங்களிலும் தேடி இறுதியில் புதுச்சேரி நண்பர் ஒருவரின் பழைய பதிப்பில் 'கார்ஒளி வண்ண னேஎன்' என்ற தொடர் இருக்கக்கண்டு, 'இது அரங்கன் என் ஆய்வுக்கு அளித்த சாட்சி' என உளம் மகிழ்ந்தார்கள்.

திருமுறைகளுக்கு நிகராகத் திருவாய் மொழியையும் போற்றிய எந்தையார் தமிழ்க்கடல் இராய. சொ. கயிலையிலும் பரமபதத்தில் 'தேவார மணி' ஒலித்துத் 'திருவாசகத் தேன்' அருந்தி 'ஆழ்வார் அமுது' அள்ளியுண்டு பிறவாப் பேரின்ப வாழ்வு பெற்றுள்ளார்கள் என்பது வெள்ளிடை மலை.

என்றும் வாழ்க எந்தை ' இராய. சொ. புகழ்.

# தமிழ்க்கடலும் சிவபூசையும்

சொல்லோவியர் **சொ. சொ. மீ. சுந்தரம்**. எம். காம்.,

**ஆலயமே காயம்; அறிவே சிவலிங்கம்**
**மாலயனும் காணுத வள்ளலுக்குச் — சீலமுறும்**
**அன்பே அபிடேகம் அன்பேநை வேத்தியமும்**
**அன்பேநல் லர்ச்சனையும் ஆம்.**

என்று தமிழ்ச் சான்றோர்கள் பாடியது போலத் தன்னுடம்பையே சிவன் கோயிலாக்கித் தான் பேசும் தமிழையே சிவனுக்கு அபிடேகமாக்கித் தன் அன்பாலேயே அருச்சனை செய்து சந்தனச் சாந்தின் சுந்தரனை வழிபட்டு நாளெல்லாம் சிவபூசை செய்தவர் தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனுர் அவர்கள்.

1958 ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்களில் தேவகோட்டையில் சிவபூசை மாநாடு நடைபெற்றது. "காசியின் மீறிய பழனுபுரி" என்று திருப்புகழ் போற்றும் பழனியில் வாழ்ந்த ஈசான சிவாசாரிய சுவாமிகள் சைவசித்தாந்த ஞானக் கதிரவனுக வீற்றிருந்து மாநாட்டை நடத்தினுர்கள். அந்த மாநாட்டிற்குத் தமிழ்க்கடலார் எழுந்தருளிச் சிறப்புரை ஆற்றினுர்கள். அப்பொழுது "இவ்வளவு காலம்வரை நான் சிவபூசை எடுத்துக்கொள்ளவில்லை. அதற்குரிய ஆளும் கிடைக்கவில்லை நாளும் கிடைக்கவில்லை. நாளை திருவாதிரை நாள். சிவபெருமானுக்குரிய நாள், மார்கழி மாதம் திருவாதிரைத் தெரிசனமாகிய அந்நாளில் தான் மாணிக்க வாசகர் திருப்பெருந்துறையில் உபதேசம் பெற்ருர். சிவமே உருக்கொண்டாற் போலப் பழனி ஈசானிய சிவாசாரிய சுவாமிகள் வந்தருள் செய்திருக்கிருர்கள். எனவே நாளை, திரு உத்தரகோசமங்கையில் நான் சிவபூசை எடுத்துக் கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன்" என்று குறிப்பிட்டார்கள். அதுபோல மறுநாள் சிவபூசை எடுத்துக் கொண்டு மீண்டும் தேவகோட்டைக்கு வருகை தந்தார்கள். இதைக் கண்டு அந்த நன்ஞளில், தேவகோட்டையில், ஈசானிய சிவாசாரிய சுவாமிகளிடம் பலரும் உபதேசம் பெற்றுக்கொண்டார்கள்.

தமிழ்க்கடல் அவர்கள் உத்தரகோச மங்கையில் சிவபூசை எடுத்துக்கொண்டதும் மங்கள நாயகி உடனுகிய மங்கள நாத சுவாமியைத் தன் வழி படு கடவுளாக எழுந்தருளச் செய்து கொண் டதும் மிகமிகப் போற்றத்தக்கவை. உத்தரகோச மங்கை திருவாச கத்தில் பாடப் பெற்ற திருத்தலம். அன்பாண்டு மீளா அருள்புரியும் ஆண்டவனுடைய நாடு தென்பாண்டி நாடு என்று பாடிய மாணிக்க வாசகர், அவனுறையும் ஊர் எது என்ற விஞவுக்குப் பக்தர்கள் சிவலோகம் எனப் பரவும் உத்தர கோசமங்கை ஊர் என்று விடையளிக்கிருர்.

**தாதாடு பூஞ்சோலேத் தத்தாய்! நமையாளும்**
**மாதாடு பாகத்தன் வாழ்பதிஎன்? — கோதாட்டிப்**
**பத்தரெல்லாம் பார்மேல் சிவபுரம்போல் கொண்டாடும்**
**உத்தர கோசமங்கை ஊர்.**

என்பது திருவாசகம் பேசும் திருந்தசாங்கம். இராவணன் மனைவி மண்டோதரி சிவபக்தியில் சிறந்தவள். மாணிக்கவாசகப் பெருமான்

**''ஆர்கலிசூழ் தென்னிலங்கை அழகமர்மண் டோதரிக்குப்**
**பேர்அருள்இன் பம்அளித்த பெருந்துறை மேயபிரானை''**

என்று மண்டோதரியைப் பாராட்டுகிருர். மண்டோதரி முன் பிறவியில் தவம் செய்த இடம் உத்தரகோசமங்கை என்பர். திருவாசகத்திலும் கம்பராமாயணத்திலும் தோய்ந்த இராய. சொக்கலிங்கனர் உத்தரகோசமங்கையைத் தேர்ந்தெடுத்தது பொருத்தம்தானே.

இலக்கிய விழாக்களுக்குத் தமிழ்க்கடலார் வெளியூர் செல்லும் பொழுது அவருடன் பூசைப் பெட்டியில் உள்ள மங்கள நாதசுவாமியும் எழுந்தருளுவார். தங்கியிருக்கும் வீட்டில் காலே வேளையில் தமிழ்க்கடலின் சிவபூசை காணப் பல அன்பர்கள் வருவார்கள். பூமாலே வாடும்; மணம் பொன்மாலேக்கில்லேயென்று பாமாலே வைத்து ஈசன் பாதம் பணிவார் சொக்கலிங்கனர். மதுரை இம்மையில் நன்மை தருவார் ஆலயத்தில் சிவபெருமான் தன்னேயே தான் அருச்சித்துக்காட்டினன். அந்த மூர்த்திக்குத்

தன்னைத்தான் அருச்சித்த மூர்த்தி என்றுபெயர். தமிழ்க்கடலார் வழிபடும் பொழுது சொக்கலிங்கமே சொக்கலிங்கத்தை வழிபடுவதைக் காணலாம். விநாயக வழிபாட்டில் தொடங்கி, தன் குருநாதர் ஈசான சிவாசாரிய சுவாமிகளை வழிபட்டு, முறைப்படி திருமுறைகளைப் பாடும் பொழுது, அழுதடி அடைந்த அன்பராகிக் கண்ணீர் வழியச் சிவக்காட்சி தருவார் தமிழ்க்கடலார்.

திருவாசகத்தில் சொக்கலிங்கனாருக்குப் பிடித்த பாட்டுக்கள் எல்லாப் பாடல்களும் என்றாலும் அவர் அடிக்கடி சொல்லும் பாட்டுக்கள் அவருடைய பக்திப் பரவசத்தை வெளிப்படுத்தும் தன்மையனவாகத் திகழ்ந்தன. அவற்றுள்

**தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்**
**சங்கரா ஆர்கொலோ சதுரர்?**
**அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்**
**யாதுநீ பெற்றதொன் றென்பால்?**
**சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்**
**திருப்பெருந் துறைஉறை சிவனே!**
**எந்தையே! ஈசா! உடலிடம் கொண்டாய்!**
**யான்இதற்கு இலன்ஓர் கைம்மாறே.**

என்ற பாடல் குறிப்பிடத்தக்கதாகும் மணிவாசகர் இறைவனைப் பார்த்து, "இறைவனே! உன்னைத் தந்தாய்; என்னைப் பெற்றுக் கொண்டாய்; நம் இருவரில் யார் சதுரப்பாடு உடையவர்? (யார் கெட்டிக்காரர்?) உன்னைப்பெற்ற நான் முடிவில்லா ஆனந்தம் பெற்றேன். என்னைப் பெற்றதால் நீ என்ன பெற்றாய்? (ஒன்றும் இல்லையே) எனவே நானே கெட்டிக்காரன்" என்று பேசும் கருத்தமைந்த இப்பாடலைச் சொல்லி இராய. சொ. அவர்கள், "இறைவன் தான் கெட்டிக்காரன். மாணிக்கவாசகர் மூலம் திருவாசகத்தையே பெற்றவன் அல்லவா அவன்! எனவே அவனே சதுரன்" என்று தற்குறிப்பேற்றம் செய்வார்.

இதே விளக்கத்தை இராய. சொ.வுக்கும் இறைவனுக்கும் கொடுத்துப் பார்க்கலாம், சிவபூசையினால் இராய. சொ. பெற்ற



தமிழ்க்கடல், சிவமணி, சிவம்பெருக்கும் சீலர், ராய. சொக்கலிங்கனார் ;

இன்பம் அதிகம். ஆனுல் தமிழமுது ஊறும் அவர் திருவாயில் திருமறைப் பாடல்களைக் கேட்கும்பொழுது மங்களநாதன் பெற்ற இன்பத்தை யாரால் அளக்க முடியும்? ஆமாம் இதிலும் இறைவனே சதுரன் ஆகிருன்.

பாண்டிச்சேரிக் கம்பன் விழாவுக்கு இராய. சொ. அவர்கள் செல்வார்கள். எந்த வீட்டில் அவர்கள் தங்கியிருக்கிருர்களோ அந்த வீட்டில் சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கும். அப்பரும், திருஞான சம்பந்தரும் இருந்த இடங்களில் அடியார்கள் கூட்டம் இருந்தது போல, தமிழ்க்கடல் இருக்கும் வீட்டில் சிவனடியார் திருக்கூட்டமும் தமிழன்பர் பெருங்கூட்டமும் நெருக்கிக்கொண்டு உட்கார்ந்திருக்கும். திருவையாற்றில் அப்பருக்குக் கயிலாயக் காட்சி கிடைத்தது. சிவம்பெருக்கும் சீலரான இராய. சொ. அவர்கள் சிவ பூசையில் பல அன்பர்களுக்குக் கயிலாயக் காட்சி கிடைத்தது. அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி வாழ்ந்த அப்பெருந்தகையின் வாழ்வு. பல சிவ பூசைச் செல்வர்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக, விளங்குகிறது. திருநாவுக்கரசரோடும் திருஞானசம்பந்தரோடும் சுந்தரமூர்த்தியாரைச் சேர்த்து வழிபட்டது போல, அமராவதி புதூரில் பிறந்து அறம் செய்த சிவபூசைச் செல்வர்கள் நாகப்ப செட்டியாரோடும் வெங்கடாசலம் செட்டியாரோடும், அதே ஊரில் வளர்ந்த இராய. சொக்கலிங்கனுரையும் சேர்த்துப் பாராட்டி வணங்குவது நாம் செய்த பெரும் புண்ணியப் பலனுதம் அன்ருே!



# இராய. சொ.வும் இறைபணியும்.

( கருப்பட்டிக் கவிராயர், காரைக்குடி. )

அமரர் தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனுர் அவர்கள் காரைக்குடியில், சீர்திருத்தத்தந்தை சொ. முரு. வுடன் சேர்ந்து தனது சமுதாயப்பணி வாயிலாக அறிமுகமாகி, 'ஊழியன்' என்ற தனது வார வெளியீடு மூலமாக இலக்கியப் பணியைத் தொடங்கினுர்கள். அதன் பின் பாரதியார், காந்தியடிகளின் தொடர்பால் அரசியலில் ஈடுபட்டுத் தமிழ் நாட்டில் தேச விடுதலைக்குப் பணி செய்து நிறைவாகச் சிவபூசைச் செல்வராகக் காட்சி தந்து இறைபணி செய்து தனது வாழ்வை நிறைவாக்கிக் கொண்டவர்கள்.

சொ. முரு. நடத்திய தனது 'குமரன்' வார இதழில் 1938 முதல் 1940 வரை இரண்டு ஆண்டுகள் வெண்பாப் போட்டி ஒன்று நடத்தினுர்கள் அப்போட்டியில் வாரந்தோறும் வெண்பா இறுதி அடி ஒன்று தந்து அதைப் பூர்த்தி செய்ய வேண்டும். இப் போட்டியில் கலந்து கொண்டு முதற்பரிசாகிய ரூ 101 யை அப்போட்டி நீதிபதிகள் ஐவரில் ஒருவராக இருந்த இராய. சொ. கையினுல் பெறப் பெற்று அவர்களுடன் எனது பதினுருவது வயது முதல் தொடர்பு ஏற்பட்டு அவர்கள் ஆசியினுல் எனது இலக்கிய அறிவைப் பெருக்கிக் கொண்டேன்.

காரைக்குடி நகரச் சிவன் கோயிலின் நிருவாக அறங் காவலராக இராய. சொ. தனது முதுமைப் பருவத்தில் 1941 ஆம் ஆண்டு இருந்த சமயம் கோயிலில், சந்நிதிதோறும், மண்டபங் களிலும், திருமுறைப்பாடல்கள், திருவாசகப்பாடல்கள் திருவிளையாடல் முதலியவற்றிலுள்ள பல சிறந்த பாடல்களைப் பொருத்தமாகத் தேர்ந்தெடுத்து எழுதிவைத்தார்கள்.

நூற்றுஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் ராய. சொ. அவர்களின் குலத்தைச் சேர்ந்த முன்னோர்களில் ஒருவரான ராய. நாகப்பசெட்டியார் என்ற சான்ருேர் கண்டு தோற்றுவித்த

நாகலிங்கவிநாயகர், நாகநாதப்பெருமான், கிருட்டினமூர்த்திப் பெருமான் கோயில்களின நிருவாகப் பொறுப்பை ஏற்ற ராய. சொ. அவர்கள் பல ஆண்டுகளுக்கு முன் தோன்றிய கோயிலைப் புதுப்பித்துத் தக்கமுறையில் திருத்தம் செய்து திருப்பணி செய்து கிலக ஆண்டு சித்திரைத் திங்களில் சிறந்த முறையில் குடமுழுக்குச் செய்துவைத்தார்கள். இக்குடமுழுக்கு விழாவில் பணி செய்யும் வாய்ப்புப் பெற்ற அடியேன் அவர்களின் நினைவாக அவர்களின் உருவச்சிலை திறப்புவிழாவில் வெளியிடும் மலரில் அவர்களின் இறைபணி பற்றி எழுதும் வாய்ப்புப் பெற்றதை எண்ணி எனது மனம் நிறைந்த மகிழ்ச்சியுடன் இக்கட்டுரையை நிறைவு செய்கின்றேன்.



*Dr. SP. Annamalai,*
B. O. L. ( Hons )., M. Litt., Ph: D.
**Principal & Post-graduate
Professor of Tamil**

Thiagarajar College,
MADURAI - 625 009.

# தமிழ்க்கடல் திளைத்த திருவாசகம்

தமிழ்க்கடல் திரு. ராய.சொ. அவர்கள் சிவம்பெருக்கிய செம்மல்; சிவபூசைச் செல்வர். நால்வர் பாடிய அருளிச் செயல்கள் அனைத்தி லும் அவர்கட்கு ஈடுபாடு எனினும் திருவாசகத்தில் அவர்கள் வைத்த காதல் வேறு எந்த நூலின் மீதும் வைக்கவில்லை. அதில் அவர் ஊறித் திளைத்தார். உணர்ந்து உருகினார். பேசி மகிழ்ந்தார்.

ராய. சொ. என்று சொன்னாலே, அவர்கள் திருவாசகப் பாடலை அனுபவித்துக் கூறும் காட்சி தான் நினைவிற்கு வரும். அவர்களும் அவ்வாசகத்தில் கலந்து கரைந்து கண்ணீர் மல்குவார் கள். கேட்பவர்களையும் அப்படியே ஆக்குவார்கள். அவர்கள் பாடலைச்சொல்லும் முறையிலேயே அதில் உள்ள உணர்வைப் படம் பிடித்துக் காட்டுவார்கள்.

ஒருமுறை காரைக்குடித் திருவாசக விழாவில் அவர்கள் தலை மையில் யான் பேசினேன். அப்பொழுது அவர்கள் ஊனாய் உயிராய் உணர்வாய் என்உட் கலந்து தேனாய் அமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்' என்ற திருவாசக அடிகளை அனுபவித்து எடுத்துக் கூறியதும் ''பண்சுமந்த பாடல் எனத் தொடங்கும் பாடலில் 'புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்' என்ற அடியைக் கூறிய போது அவர்கள் உடல் நடுங்கியதும் என் நினைவில் நிற்கின்றன.

ராய. சொ. பேசிய பேச்சு திருவாசகம் பற்றியது. அதன் வாச்சியமான ஆனந்தக் கூத்தனைப் பற்றி இக் கூட்டத்தில் பேசிய தமிழ்க்கடல் அவர்கள், இன்னுளில் பேரின்பக் கடலில் சங்கமம் ஆகிவிட்டார்கள்.

இனி யார் அவர்கள் போல் திருவாசகம் பேசுவார்?

# தமிழ்க்கடலின்
# இலக்கியப் பணிகள்

டாக்டர் திருமதி **சரசுவதி இராமனுதன்**, பள்ளத்தூர்.

செட்டிநாட்டில் கடல் இல்லையே என்று ஒருவர் கூறினுராம். அப்பொழுது அருகிலிருந்த ஓரறிஞர் யார் சொன்னது இல்லை யென்று, தமிழ்க்கடலே காரைக்குடியில் தானே இருக்கிற தென்ருராம். அத்துடன் நில்லாமல் அந்த உவர்க்கடல் பல்லாயிரம் தமிழ் நூல்களை விழுங்கிற்று, ஆனுல் இந்தத் தமிழ்க்கடலோ ஏராளமான தமிழ் நூல்களைத் தந்தது என்றும் கூறினுராம்.

## இந்து மதாபிமான சங்கம்

'பல நூல்கள் பதிப்பித்தும், பல பெரியோர் பிரசங்கங்கள் பண்ணுவித்தும்' இந்துமதத்தை முன்னேற்றப் பாடுபடுகிறது என்று மகாகவி பாரதியார் புகழ்ந்து பாடிய இந்துமதாபிமான சங்கத்தின் உயர்ந்த கட்டிடமும் வளமான நூலகமும் தமிழ்க் கடலாரின் நினைவாலயங்களாகும்.

## இலக்கியக் குடும்பம்

"பேர் சொல்லப்பிள்ளை வேண்டு"மென்பார்கள். எண்ணற்ற இலக்கிய அறிஞர்களைத் தம் குழந்தைகளாகப் பெற்ற இலக்கிய சம்சாரி ராய. சொ. அவர்களின் பெயர் என்றும் நின்றுநிலவும்.

## தொகுத்த நூல்கள்

உரை எழுதிப்பதிப்பித்த நூல்கள், தாமே எழுதிய நூல்கள் என்று பல நூல்களைத் தந்தவர் தமிழ்க்கடல். திருமணம், மணிவிழா இவற் றில் எங்கள் ஞானத் தந்தையார் அன்பர்களைக் கொண்டு நல்ல நல்ல நூல்களைத் தொகுத்தளித்தார்கள். "மீனுட்சி திருமணம்" ஆழ்வாரமுது, திருவாசகத்தேன், பன்னிரு திருமுறைத்திரட்டு முத லியவை இவ்வாறு வெளிவந்தவையே. அருணசலபுராணம், திரு

விளையாடற்புராணம், கூளப்ப நாயக்கன் விறலி விடுதூது போன்றவை அவர் குறிப்புரை, விளக்கவுரை தந்து பதிப்பித்தவை. கம்பனும் சிவனும்,வில்லியும்சிவனும், 'காதற்பாட்டு,'இவை அவரது ஆராய்ச்சிப் படைப்புக்கள். காந்திக் கவிதை அவரது தனிப்பெருங் காவியம். தமிழர்ச்சனைக்காக 108 போற்றி, விநாயகர், சிவன், திருமால், அம்பிகை, முருகன் முதலான தெய்வங்களுக்குத் தொகுத்தளித்தவர் எங்கள் பெருமைமிகு ஆசான்.

## சொல்லுக்கு உயிர் தரும் பேச்சாளர்

தமிழ்க்கடலின் சிம்மக்குரலை ஒரு முறை கேட்ட வரும் அந்தக் காந்தக் குரலை மறக்க இயலாது. அவர் பாடம் சொல்லும் அழகே தனி. ஒருமுறை ஒரு பாடலை அழுத்தமாக, தெளிவாக, பதம் பிரித்து, உணர்ச்சி பொங்க அவர் கூறக்கேட்ட பின் மறு முறை கேட்க வேண்டாத அளவு மனத்தில் ஒலிப்பதிவாகிவிடும். அந்த அளவு ஒலிக்கு உயிர் தந்த மேதை தமிழ்க்கடல். "பாவ" பூர்வமாகச் செய்யுளைச் சொல்லுவார் 'இதுவல்லவோ பேச்சு' என்று எல்லோரும் போற்றியது அவரது பேச்சைத்தான்!

## சைவ வைணவப் பாலம்

சிவமணி, சிவம் பெருக்கும் சீலர், என்றெல்லாம் பட்டம் பெற்ற சிவநேபச் செல்வர் எங்கள் ஆசான். ஆனல் ஆழ்வார்களிடம் ஆழங்கால்பட்டவர். தேவாரத்திருமுறைகளில் ஒரு பாடலுக்கு நயம் சொன்னவுடன் அதே போல் திவ்வியப்பிரபந்தப் பாசுரத்திலும் ஒன்றை நயம் கூறி ஒப்புமையும் காட்டுவார். அத்தகைய சமரச மனப்பான்மை கொண்டவர்.

இவவாறு தானே நூலாசிரியராகத் திகழ்ந்தும், உரையாசிரியராக விளங்கியும் பதிப்பாசிரியராக இருந்தும், பலருக்குப் பாடம் சொல்லியும், பல பிரசங்கங்கள் செய்தும், பிரசங்கிகளையும், கவிஞர்களையும் ஊக்குவித்தும், பல விழாக்கள் நடத்தியும், இந்து மதாபிமான சங்கத்தலைவராகவும், காரைக்குடிக் கம்பன் கழகத் தலைவராகவும் திகழ்ந்ததுடன் தானே ஒரு பல்கலைக் கழகமாக விளங்கினர் தமிழ்க்கடல். அவர்கற்பித்த தமிழால் பேரும் புகழும் பெற்றுத் திகழ்பவர் பலரில் அடியேனும் ஒருத்தி. அவர் தந்த தமிழால் அவருக்கு அஞ்சலி செலுத்தி வணங்குகிறேன். வாழ்க தமிழ்க்கடல் நாமம்.

# பதிப்புத்துறையில் இராய. சொ.

மு. ராமசாமி, இராசிபுரம்.

மா நிலம் பயனுற வாழும் வாழ்க்கையினர் சால்புடைப் பெருமக்கள், அத்தகைய சான்றோருள் ஒருவராய்த் திகழ்ந்தவர் நம் போற்றற்கும் பாராட்டுக்கும் உரிய தமிழ்க்கடல் இராய. சொ. அவர்கள். சிவமணியாய் சிவம்பெருக்கும் சீலராய், வைணவப் பக்திப் பாசுரங்களுக்குப் பறிகொடுத்த நெஞ்சினராய், பண்பாட்டுச் சின்னமாய், தமிழ் இலக்கியக் கொள்கலனாய், தியாகச் செம்மலாய், தூய்மைத் திருவுருவினராய் வாழ்க்கை நடாத்திய அவர்கள், தாம் பெற்ற ஆற்றலைப்பல துறைகளிலும் வெளிப்படுத்திமகிழ்ந்தார்கள் அவரது அரசியல் அனுபவம், நிர்வாகத்திறன், சமயஞானம், இலக்கியப் பேரறிவு, எழுத்தாற்றல், சொல்வன்மை, கொள்கைப் பிடிப்பு, தூய்மைத் தோற்றம் ஆகியவற்றைக் கண்டு வியவாதார் யாரும் இலர் எனலாம்.

வீழ் நாள்படாமல் நன்றாற்ற, இவர் நுழைந்த எத்துறையிலும், புகழ் மணக்கத் தோன்றுவதே இவர் தம் இயல்பு. "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற வள்ளுவத்திற்கோர் இலக்கியமாக நம்தமிழ்க் கடலார், பணியாற்ற எடுத்துக்கொண்ட இலக்கியத்துறையை நான்காகப் பகுக்கலாம். வியாசரும் வடமொழி வேதத்தை நான்காகத்தானே பகுத்துக்கொடுத்தார். பழஞ்செய்யுள் தொகுப்பு, புதுமைப் படைப்பு, மாதவார இதழ்கள் நடப்பு, புத்தகப் பதிப்பு என்ற நால்வகையாக அமைகின்றன இவர் தம் இலக்கியப் பணி. ஒவ்வொன்றையும் கலைநலம் மிளிர அமைத்துக்காட்டுவதே இவர்தம் பணியின் சிறப்பு.

பதிப்புத்துறையில் இவர் மேற்கொண்டு காட்டிய சிறப்பாற்றலைக் காண்போம். தமிழ்க்கடலார் தாம் தொகுத்த இலக்கியங்களை அவரே பதிப்பித்துள்ளார். அவர்தம் படைப்பு இலக்கியங்களும் அவரது பதிப்பே. பழைய இலக்கியங்களையும் புதுமை வளத்தோடு பதிப்பித்துள்ளார்கள். அவர்கள் பதிப்பித்துள்ள எந்தப் புத்தகமும், கண்டார் கண்ணையும் கருத்தையும்

கவர்வனவாக அமைந்திருக்கும். அந்தப் புத்தகங்கள் ஒவ்வொன்றும் அவரது பதிப்புக் கலைத்திறனை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும். நூல்கள், எவ்வளவு உயர்ந்த கருத்துக்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருந்தாலும், பதிப்பு செம்மையாக அமையாது போனால், நூலசிரியருக்குப் பாதிப்புத்தான். இதனை நன்கு உணர்ந்தவர் நம் தமிழ்க்கடலார்.

இவர், இலக்கியங்களைப் பதிப்பிக்கும் துறையில் சிறப்பாகக் கையாளும் உத்தி, சொல்பிரிவு செய்வதுதான். அதே சமயம் யாப்பிலக்கணம் வழுவாமல் சீர் பிரிவும் அமையும். ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ள நூல் இவரது பதிப்புக்கலைக்கு உரியதாகும் போது, குறை, திருத்தம் செய்யப்பெற்று சீர்மையுடன் திகழும்.

எடுத்துக்காட்டாக ஒன்று பார்ப்போம். 'தேவார்மணி' அப்பர் தேவாரம்-திருத்தாண்டகம்-தாண்டகம் எண்சீர் விருத்தம்-106 ம் பாடல் "சங்கநிதி பதுமநிதி"– அங்கமெல்லாம் குறைந்தழுகு தொழுநோ "யராய்" இது பழைய பதிப்பு சீர்ப்பிரிவு 'யராய்' ஓரசையாக உள்ளது. யாப்பிலக்கணப்பிழையாகும் என எடுத்துக் காட்டி "யாராய்" என அமைத்து சீர் செய்துள்ளார் நம் புலமைப் பெருந்தகையார். இப்படித் திருத்தம் பெற்றவைகள் பலவற்றை அவர் தம் பதிப்பில் காணலாம்.

அரும்பதவுரை, அடிக்குறிப்புரைகளோடு கூடிய இவரது பதிப்பு, செய்யுளைக் கற்பாருக்கு, பொருளை எளிமையாகக் காண்பிக்கும் இயல்பினவாகும். புத்தகத்தின் முன்னிடத்தை முகவுரையும் பின்னிடத்தை செய்யுள் முதற்குறிப்பு அகராதியும் நிறைவு செய்துகொண்டிருக்கும். இவரது பதிப்பு, விலை மலிவு பெறுமேயன்றி பிழை மலிவு பெறாது. பதிப்பிக்கும் நூல்களில் அச்சுப் பிழை அறியாது நுழைந்துவிடுமேயானால், அதனைப் பெரும் பிழையாகக் கருதி, தமிழ்க் கடலார் அவற்றைக் களைவதில் கண்ணும் கருத்துமாக இருப்பார்.

தமிழ்க்கடலார் கைவண்ணம் பெற்ற பதிப்புக்கள் அனைத்தும் காண்பார் கண்ணைக் கவரும் கவினொடு திகழ்பவை; எடுத்துப் பயில்வார்க்கு எளிமையாகக் கருத்து விளக்கம் செய்பவை; அச்சுப்

பிழை அணுவளவும் காணக்கூடாதவை. இப்படிப் பதிப்பித்தநூல்கள் பலவற்றிலும் ஆங்காங்கே பொருத்தமான பிற இலக்கிய மேற்கோள்களையும் காணலாம். அம்மேற்கோள்கள் இவரது, முடித்த கேள்வி முழுதுணர் புலமையை, வெளிப்படுத்திக் கொண்டிருக்கும்.

சிற்றிலக்கியம் முதல் பேரிலக்கியம் வரை பல நூல்கள் இவரால் பதிப்பிக்கப் பெற்றுள்ளன, சுப்ரதீபக்கவிராயர் செயதகூளப்ப நாயக்கன் விறலி விடுதூது, ஆசிரியர் அறிய இயலாத "வருண குலாதித்தன் மடல்" இவற்றின் பதிப்புக்காலத்தை காந்தி ஆண்டு 80, 79 எனக்குறிப்பிட்டுள்ளார். இது இவர் காந்தியம் பெருமான் பால் கொண்டுள்ள அசையாத பற்றை விளக்கிக் காட்டுகின்றது. இவ்வாறாக, இவர் பதிப்பித்துள்ள ஒவ்வொரு நூலும், இவரது ஒவ்வொருவிதமான இயல்பினை வெளிப்படுத்தும். பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடல் புராணம் மதுரைக்காண்டம் பத்து ஆண்டுகட்கு முன்பு இவரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. அழகான அந்தப்பதிப்பில் இவர்தம் சைவநூற் புலமையும், சிவபக்தி மணத்தையும் காணலாம். "ஆழ்வார் அமுது" பதிப்பில், வைணவப்பாசுரங்களில் தோய்ந்து திளைத்த இவர் தம் கவிதாரசத்தைப் பார்க்கலாம். காதற் பாட்டு, தேனும் அமுதும், திருவாசகத்தேன், திருமுறைத்தீங்கனி, பிள்ளைப்பாட்டு முதலிய பல இலக்கியத் தொகுப்பு நூல் பதிப்புகள்; இவா, கற்றார்க்குத்தாம் வரம்பாகும் தக்காராய் வாழ்ந்து, பதிப்புத்துறையில் தலைசிறந்தவராய்த் திகழ்கின்றார் என்பதை எடுத்துக் காட்டி நிற்கும்.



தெ. முருகசாமி, எ.எம்.ஏ.,
முதல்வர்

இராமசாமி தமிழ்க்கல்லூரி,
காரைக்குடி.

# இராய. சொ.வும் பாரதியும்

பழுத்த தமிழ்ப்புலமையும் அழுத்தமான சமயப்பற்றும் கொண்டவர் இராய. சொ. 'தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார் இங்கமரர் சிறப்புக்கண்டார்' என்ற பாரதியின் வரிகள் அவருக்கு முற்றிலும பொருந்தும். விதுரன் மனைக்கு கண்ணபிரான் வந்ததைப் போலத் தம் மனைக்கு காந்தியடிகள் வந்து பெருமைப்படுத்தியதைப் பல படியாகக் கூறி மகிழும் இராய. சொ. அவர்கள் பாரதியாரைக் கண்ணாரக்கண்டு நெஞ்சார வரவேற்று வாய்மணக்க அவருடன் பேசிமகிழ்ந்ததை அவ்வப் போது உடனிருப்போர்க்குக் கூறி மகிழ்வார். தொடக்க காலத்தில் இந்திய தேசிய விடுதலை வாழ்வால் தமமை அடையாளம்காட்டிக் கொண்டார். என்றாலும் தொடர்ந்து தேசிய வாழ்வில் நின்று நிலைகக முடியாமற்போகவே அவரது நாட்டுப் பற்று மொழிப் பற்றாக விரியத் தொடங்கியது. இதனால் அவர் தமிழ்க்கடலானார் தமிழிலக்கிய மேடைகளில் தமக்கோர இடத்தையும் பெற்றார்.

தேசிய வாழ்வில் பாரதியைப் பார்த்ததை விட அவர் தம் தமிழ்க்கவிதைத் திறத்தால் பாரதியை முற்றிலுமாக அளந்தார். அவர் தம் படைப்புக்களில் நெஞ்சைப் பறிகொடுத்தார். பாஞ்சாலி சபதத்தைத் தொட்டுப் பேசும் போதெல்லாம் அவருக்கு பாரதியின் உணர்ச்சியும் ஆவேசமும் கிளம்பி விடும். வில்லிபுத்தூரார் விரித் துரைக்காத பாஞ்சாலி சபதச் செய்திகள் பாரதியால் பெருக்கமாகக் கூறப்பட்டதன் உண்மை யாதென உணர்ந்தார். தேதியத்தைத் தெய்வமாகப் பார்ப்பதே பாரதிப் பாடலின் மையம். இது பாஞ்சாலி சபதத்தில்தான் முற்றிலுமாக வேரோடிக்கிடக்கிறது. இப்பளிச்சிடும் உண்மையை உணர்ந்ததால் அதைத் துருவித் துருவிப் பந்தாடிப் பேசுவார், தேசிய கண்ணோட்டம் கொண்ட இராய. சொ. பாப்பின் காலறியும் பாம்பாகச் சீறி, தம் உடலுக்கேற்படும் துன்பத்தையும்

மறந்து பாரதித் தமிழில் படமெடுத்தாடுவார். அதைப் பார்ப்போர்க்கும் கேட்போர்க்கும் ஒரு சக்தி பிறக்கும் என்பதில் ஐயமில்லை.

ஒரு புதிய யுகம் இந்தியாவில் மலரவேண்டும் என்ற எண்ணம் பாரதிக்கு இருந்தது போலவே இராய. சொ. விற்தும் இருந்தது. பாரதி காலத்திய நடப்பியல் உலகம் இராய. சொ. காலத்திலும் மாறவில்லை. பாரம்பரியமாகத் தொடர்ந்து வரும் நாட்டின் பெருமையும் புகழும் ஆங்கிலேயருக்கு அடகு வைத்து நாட்டைக் கெடுத்ததுபோலவே விடுதலையடைந்த தம்காலத்திலும் பெற்ற சுதந்திரத்தைப் பேணிக்காக்கத் தடுமாறும் நம்மவர்கள் தங்களுக்குள்ளேயே போட்டி, பொறாமைகளால் நாட்டைச்சீரழித்து வரும் அவலத்தைப் பார்க்கும் போது பாரதிக்கு இருந்த குமுறல் இராய சொ. விற்தும் இருந்தது என்பதில் வியப்பில்லை.

'பெண்மை வாழ்க என்று கூத்திடுவோமடா'- என்ற பாரதிக்கு விளைவு கருதாது ஆடிய சூதாட்டத்தால் நாடு அடிமையானதும் ஒருபெண் அவமானப் பட்டதும் மனிதசமுதாயத்தில் காணமுடியாத கொடுமையாகப்பட்டது. மக்களிடத்தில் அரசியல் விழிப்பும் நாட்டுப்பற்றும் பரவவேண்டும் எனக் கருதியே பழைய கதையைப் புதிய வார்ப்பில் பாஞ்சாலிசபதமாகப் பாடினார். துரியோதனன்-சகுனி என்ற முரண்பட்ட எதிர்த்தட்டுப்பாத்திரங்களின் மூலம் பாரதி தன் உட்கிடக்கையை வெளிப்படுத்தினார். ஒரு முரண்பட்ட பாத்திரத்தைச் சித்தரிப்பதன் மூலமே ஒருகவிஞனை நன்கு அளக்க முடியும் என்று இராய. சொ. அடிக்கடி கூறுவார். எனவே பாரதி படைத்த பிறபாத்திரங்களைவிட துரியோதனன் - சகுனி என்ற மாறுபட்ட பாத்திரங்களில் இராய. சொ. விற்குப் பெரிதும் ஈடுபாடு இருந்தது.

இராசசூய யாகத்தில் பாண்டவர்கள் அடைந்தபெருமிதத்தைக்கண்டு துரியோதனன் பொருமுகிறான். அவர்கள் பெற்ற பரிசுப் பொருள்களின் பட்டியலை நீள நினைந்து 'எப்படிப் பொறுத்திடுவேன் மாமனே,' - என்று சகுனியிடம் அங்கலாய்க்கின்றான்.

நிதிசெய் தாரைப் பணிகுவர் மானிடர் மாமனே ! - எந்த
நெறியி னுலது செய்யினும் நாயென நீள்புவி
துதிசெய் தேயடி நக்குதல் கண்டனே மாமனே ! - வெறும்
சொல்லுக் கேயற நூல்கள் உரைக்கும் துணிவெலாம்

என்று மானிட வாழ்வின் கீழ்மையைக் கூறினான் துரியோதனன். இன்றும் பட்டம் பதவிகளுக்கு ஆட்பட்டு அலைமோதும மானிட வாழ்வின் தரம் எவ்வளவு கீழ்த்தரமானது என்பதை அளந்து காண இவ்வரிகளே சான்று. அரண்டவன் கணணிற்கு இருண்டதெல்லாம் பேய் என்பதுபோல கறுத்த உள்ளங் கொண்ட துரியோதனனுக்கு அறநூல்களின் உண்மைகள் துச்சமாகத் தெரிகின்றன. அறம் உணர்த்தும் சொற்களை வெறும் சடமாகக் கருதினானேயன்றி அதன் சொற்பொருள் உயிர்ப்பை உணர்ந்தானல்லன். தந்தை திரிதராட்டிரன் உரைக்கும் நீதிகளை வெறுத்து சகுனியோடு, சேர்ந்து செய்யும் கூட்டுச்சதியால் ஆணவத்தின் உச்சத்திற்கே சென்று விடுகின்றான்.

சூதாட மறுக்கும் தருமனைப் பார்த்து சகுனி கூறும் நயப் புரைகள் ஏமாற்றுக் காரர்களின் பேச்சு வன்மையை வெளிப்படுத் துவனவாகும்.

அச்ச மிங்கிதில் வேண்டா — விரைந்
தாடுவம் நெடும்பொழு தாயினதால்
நிச்சயம் நீவெல்வாய் — வெற்றி
நினக்கியல் பாயின தறியாயோ?
நிச்சயம் நீவெல்வாய் — பல
நினைகுவ தேன்?களி தொடங்கு கென்றுன்.

'வெற்றி யுமக்கே கிட்டும், நிச்சயம் வெல்வாய்' என உடன் பாட்டில் கூறிச் சூது வலையில் சிக்க வைக்கத்துடிக்கும் சகுனியின் பேச்சுப் பின்னலுக்கு ஈடேயில்லை எனலாம். சூதாட்டத்தில் தருமர் நாட்டை இழந்துவிட்டார். பாரதிக்கு எல்லையற்ற வெறுப்புண்டாகிறது.

கோயிற் பூசை செய்வோர்—சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்து நிற்போன்—வீட்டை
வைத்தி ழத்தல் போலும்



இடமிருந்து : அ. மு. க. மு. க. கருப்பஞ்செட்டியார், தமிழ்க்கடல் ராய. சொ.
மகாகவி சுப்பிரமணிய பாரதியார், சொ. முருகப்பா,
சி. நாராயணன் செட்டியார் நிற்பவர் : மு. நடராசன்

நாள் : 9—11—1919

ஆயிரங்க ளான நீதி
யவையு ணர்ந்த தருமன்
தேயம்வைத் திழந்தான்—சீச்சி;
சிறியர் செய்கை செய்தான்.

தருமன் செயல்மீது பாரதிக்கு இருந்த ஏளனம் 'சீச்சி' என்ற ஒரு சொல்லில் விசுவரூபம் எடுத்ததைப் பன்னிப் பன்னிப் பேசுவார் இராய. சொ. இப்பகுதியில் பாரதியார் கூறும் உவமைப் பொருளில் நீந்தி விளையாடுவார். விதுரனைப் பார்த்து துரியோதனன் 'சீச்சி' என இகழ்ந்துரைக்கும் பேச்சோடு ஒப்பிட்டுக் கூறுவார். பாஞ்சாலியை அழைத்துவரும்படி ஆணையிட்டபோது விதுரன், 'மாபாரதப்போர் வரும் நீர் அழிந்திடுவீர்' என எச்சரித்தான். தன் சிற்றப்பன் என்றும் கருதாத துரியோதனன் "சீச்சி" என இடி போல் முழங்கி 'மடையா கெடுகநீ' என வெறுத்துரைக்கின்றான். ஈண்டு ஒரு கதா பாத்திரத்திற்கிருந்த உணர்ச்சியைப் போலவே தருமன் சூதாடி நாட்டையிழந்தபோது பாரதிக்கு ஏற்பட்டுவிட்டது. எல்லாப் பாத்திர உணர்வுகளும் படைக்கும் ஒரே கவிஞனிடம் உருவானவையே. என்றாலும் தன்னையும் ஒரு கதா பாத்திரமாகத் தான் படைக்கும் படைப்பில் தன்னை மறைமுகமாகக் கரைத்துக் கொண்டு உணர்ச்சியை அத்துமீறி ஒரு கவிஞன் வெளிப்படுத்துவதென்பது எல்லாவற்றையும் கடந்த ஏதோ ஓர் உட்கிடக்கையை வெளிப்படுத்தவன்றோ என்பது இராய. சொ.வின் கணிப்பு.

இப்படி ஒரு கவிஞரின் நெஞ்ச ஊடுருவலை நெருடிப் பார்ப்பதில் இராய. சொ. மிகவும் வல்லவர். பாஞ்சாலி சபதம் முழுவதும பாரதியின் உணர்வுப் பசிக்கு இரை என்றால் இராய. சொ.வால் பிறர்க்கேற்படும் தமிழ்ப்பசிக்கு அவர் தம் நாவன்மையால் பரிமாறும் நல்ல இரையும் அதுவே எனக்கருதலாம்.

வாழ்க இராய. சொ. வின் புகழ்!

---

# செந்தமிழ்ச் செம்மல்

ஸ்ரீராமகதாரத்ன வே. தியாகராசன்
ஸ்ருங்ககிரி ஆஸ்தான வித்வான்

தமிழ் வளர்த்த சான்றோராகிய உயர்திரு ராய. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களிடம் முப்பது வருடங்கள் பழகும் பேறு பெற்றவன் அடியேன். 1953ம் வருடம் காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் அடியேனது 60வது. கம்பராமாயணச் சொற்பொழிவு நடைபெற்றபோது திருவாளர்கள். சா. கணேசன், ராய. சொ., சொ. முருகப்பா மூவரும் சேர்ந்து வருவார்கள். நடுநாயகமான திரு. ராய. சொ. அவர்கள் மற்ற இருவருடன் அவ்வப்போது அளவளாவிக் கொண்டே சொற்பொழிவை அனுபவிப்பார்கள். "தம்பி! கதை அழகாகச் சொல்லுகிறீர்கள். எழுத்துப் பிழைகளுடன் பாடுகிறீர்கள்" எனத்தனியாக அழைத்துத் திருத்துவார்கள்.

தமிழ்ப்பாடல்களை இலக்கணமில்லாமல் பாடினால் சீற்றம் அடைந்து விடுவார்கள் என்று நான் கேள்விப்பட்டதுண்டு. என்னைத் தனக்கு மகன் என்றும் என் மனைவியைத் தனக்கு மகள் என்றும் கூறுவார்கள். "என்ன, ஐயா! நான் மகனாகவும் அவள் மருமகளாகவும் அல்லது அவள் மகளாகவும் நான் மருமகனாகவும் தானே இருக்கமுடியும். கணவன் மனைவியானவர் எப்படி மகனாகவும் மகளாகவும் இருப்பது?" என ஒரு நாள் கேட்டேன்.

"தியாகராசு, நீங்கள் சிலப்பதிகாரம் படிக்கவில்லை (உண்மை! முக்காலும் உண்மை! கம்பனையே 45 வருடங்களாகப் படித்து வருகிறேன். இன்னும் படித்து முடியவில்லை) கவுந்தியடிகள் கோவலனையும் கண்ணகியையும் மகனாகவும் மகளாகவுமே எண்ணினதாக வருகிறது. அதே எண்ணம் எனக்கு. இருவருமே நெருங்கின உறவாக இருக்கவேண்டுமென்று ஆசை. அந்தமுறையில் என் ஆசையை இவ்வாறு அழைத்து நிறைவேற்றிக் கொள்ளுகிறேன்" என்றார்கள். அவர்களது மறைவு எங்கள் குடும்பத்தினருக்கு என்றும் மாறாத ஏக்கத்துடன் கூடிய

வேதனையை ஏற்படுத்தியுள்ளது. அவர்களிடம் சைவநூல்களைப் பாடம் கேட்க ஆசைப்பட்டேன். அது என்றும் நிறைவேற முடியாத குறையாகவே உள்ளது? என்ன செய்வேன்? என் அன்பரை எப்படிக் காண்பேன்!

பாடல்களைப் பிரித்துப்பொருள் கூறுவதில் அவருக்குஇணை அவரே! ஒரு உதாரணம்! பெரிய புராணத்தில் திருநகரச் சிறப்பு. சோழனிடம் மந்திரிகள் தேரில் பசுங்கன்று அகப்பட்டதைப் பக்குவமாகக் கூறி, இளவரசன் மீது குற்றமே இல்லை எனப் பரிந்துரைப்பதாகக் கூறும் பாடல். திரு. ராய. சொ. கூறுவதைக் கேளுங்கள்.

"வளவ! உன் மகன் நெடுந்தேரில் வந்தான் *மணியோசை கேட்டுக் கன்று விலகவில்லை.* தனியாக வந்தானு? அளவில் *தேர்த்தானை சூழ வந்தான்.* அத்தனை பேரும் கன்று வந்ததைக் *கவனிக்கவில்லை.* தேரினுள் இருந்த மைந்தன் கன்றை *எப்படிக் காணமுடியும்?* அதுமட்டுமல்ல கன்று வழிதவறி *அரசர் உலாவும் தெருவில் வந்துவிட்டது* எவருமே எதிர்பார்க்கவில்லை. மேலும் அரசனின் மகன் *கன்றின் மீது தேரை ஏற்றவில்லை* தாஞக அது தேர்க்கால் *இடை புகுந்து* இறந்தது. இவ்வளவும் அறியாத தாய்ப்பசு முறையிடுகின்றது" என்று கூறி இவ்வளவு கருத்துக்களையும் ஒன்றுவிடாமல் கூறும் பாடலைப்பாருங்கள்.

**வளவ!நின் புதல்வன் ஆங்கோர் மணிநெடுந் தேர்மே லேறி**
**அளவில்தேர்த் தானைசூழ அரசுலாம் தெருவில் போங்கால்**
**இளையஆன் கன்று தேர்க்கால் இடைபுகுந்து இறந்த தாகத்**
**தளர்வுறும் இத்தாய் வந்து விளைத்ததித் தன்மை என்றார்.**

"என்ன நடக்கும் என்று அறியாத இளங்கன்று அறியாமையால் தேரில் அகப்பட்டது. எனவே அதனையும் குற்றம் கூற முடியவில்லை. "*இளங்கன்று பயம் அறியாது*" என்ற பழமொழி பொய்க்குமா?" என விளக்குவார்.

திரு ராய. சொ. அவர்கள் கூறும் கருத்துக்களைக் கூறியுள்ளேனே தவிர அவர் கூறிய முறையை என்னால் விளக்க இயலவில்லை. நேரில் கண்டவருக்கே அந்த இலக்கியச் செல்வரின் இன்பச் சொற்களின் அழகை அனுபவிக்க இயலும்!

ஈரோட்டில் ஒரு சமயம் திருமுறை மகாநாட்டில் தலைமை தாங்க வந்திருந்தார்கள். "என் தாய் நாடான கோவை மாவட்டத்திற்கு வந்துள்ள என் ஆருயிர் அன்பரான. திரு. ராய. சொ. அவர்களை வரவேற்று மாலையிட்டு என் நாட்டு மக்கள் சார்பாகவும் என் சொந்தச்சார்பிலும் வரவேற்பதில் மகிழ்கிறேன்", என்றேன்.

"தியாகராசன் பிறந்தது கோவையிலேதான். ஆனால் அவரது தாயார் எங்கள் பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையைச் சேர்ந்தவர். சிறிய வயதில் தந்தையை இழந்து மதுரையிலே சுமார் இருபது வருடங்கள் வளர்ந்து தமிழ் பயின்றார் அதுமட்டுமல்ல இருபது வருடங்களுக்கு மேலாக எங்கள் எல்லையில் உள்ள புதுக்கோட்டையில் வசிக்கிறார். எனவே அவர் இனி தன்னைப் புதுக்கோட்டை தியாகராசன் என அழைத்துக் கொள்ள வேணும். அவர் எங்களைச் சேர்ந்தவர்" என்றார். அந்த அன்பை இனி எங்கு காண்பேன்!

எனது இராமாயணச் சொற்பொழிவு நடக்கிறது என்பதை அறிந்ததும் ஈரோட்டில் வந்து கேட்டு இன்புற்று ஆசி கூறினார் அன்று இரவு பேசும் போது "சிவன் கோயிலில் இராமாயணம் நடக்க வேண்டும். பெருமாள் கோயில்களில் திருவிளையாடற் புராணம் போன்ற கதைகள் நிகழச் செய்து சைவ வைணவ வேறுபாடுகளை அகற்ற வேண்டும்" என்றார். அந்தக் கொள்கையைச் செயலில் காட்டும் முறையில் "கம்பனும் சிவனும்" "வில்லியும் சிவனும்" என்ற இரண்டு நூல்களையே எழுதினார்.

திரு. இராய. சொ. அவர்களுக்குப் பல நூல்களில் உள்ள பாடல்கள் மனப்பாடம். சுமார் இரண்டுலக்ஷம் பாடல்களாவது அவருக்கு மனப்பாடம் என்பது என் கருத்து.

தவறு கண்ட இடத்தில் உடனே கண்டிக்கத் தயங்க மாட்டார். வடமொழி—தமிழ்மொழி என்ற வேறுபாடு இல்லாதவர். எனினும் ஓரிடத்தில் இவரை வான்மீகி ராமாயணச் சொற்பொழிவில் தலைமை ஏற்கச் சொன்ன போது, ஏற்ருர். பிரசங்கியார் கூறிய சிலவற்றை ஏற்றுக் கொள்ள முடியாதிருந்ததாலும் தெளிவில்லாதிருந்ததாலும் "இவரை ஏன் பிரசங்கத்திற்கு ஏற்பாடு செய்தீர்கள்? பக்தர்களுக்கு இவர் கூறும் உண்மைகள் பயனற்றவை. என்னிடம் முன்னுலேயே சொல்லியிருந்தால் வடமொழி வல்லவர் எவரையாவது அல்லது தமிழில் நன்கு பேசக் கூடிய யாரையாவது அனுப்பியிருப்பேனே" என்ருர். குற்றங்கண்ட இடத்தில் தயங்காது கண்டிக்கும் குணமுடைய இப்பெரியார் கருணையே உருவானவர். படித்தவர் எவராலுைம் இவரது ஆதரவு என்றும் இருந்தது.

திருவிளையாடற் புராணம் பற்றிப் பேசும்போது, "***பண் சுமக்கும் சொல்லி பங்கன்***" என்ற சிவபெருமானைக் குறித்துக் கூறும் பெயரைக் கூறிக்கூறி "தியாகராசு! எவ்வளவு அழகான சொற்கட்டு! என்ன நயம்! என்ன பக்தி" என்று உருகுவார், வார்த்தை வார்த்தையாக நயங்காணும் பண்பு

சிவபக்தரான அவர் சிவபூசை முடித்து, சிவன்கோவில் வைபவம் ஒன்றில் கலந்துகொண்டு, சிவப்பிரசாதம் பெற்று, தனது மேனி வாடாமல், திடீர் என மறைந்ததிலிருந்தே சிவபெருமானின் குஞ்சிதபாதத்தில் கலந்து அழியாநிலை பெற்றுவிட்டார் எனப் புரிகிறது.

என்னை எத்தனையோ இடங்களுக்கு அனுப்பி உதவி நான் மேன்மையடைய உதவி செய்தார். எனது முன்னேற்றம் கண்டு மகிழ்ந்து வாழ்த்திஞர். இன்று அடியேன் நல்ல நிலையில் இருப்பது கண்டால் மகிழ்ச்சியடைவார். என் மட்டில் அவர் மறையவில்லை. அவரது மிக அழகிய நூல்களான "கம்பனும் சிவனும்" "வில்லியும் சிவனும்" ஆகிய புத்தகங்கள் மூலம் என்னிடம் பேசுகிருர் என ஆறுதலடைகிறேன்.

தமிழும் இந்துமதாபிமான சங்கமும் என்றும் அழியாதவை. அவை திரு. ராய. சொ. அவர்களின் பெருமையை என்றும் உலகத்திற்குக் காட்டி அவர் பெயரை விளங்கச் செய்யும் என்பதில் ஐயமில்லை. வாழ்க ராய. சொ. நாமம்! வாழ்க தமிழ்! வாழ்க உலகெலாம்.

"வாழ்க இந்து மதாபிமான சங்கம்!"



# வில்லி நயங்கண்ட வித்தகர்

டாக்டர் **வெ. சு. அழகப்பன்** தமிழ்ப்பேராசிரியர்
அழகப்பா கல்லூரி, காரைக்குடி.

செட்டிநாட்டில் - நாட்டுப்பற்றுளராய், விடுதலை விரும்பியாய், காந்தீய வாதியாய், சமூகத்தொண்டராய், சமூகச் சீர்திருத்தவாதியாய், இதழாசிரியராய், கவிஞராய், பொழிஞராய், புலவர் உறவைப் போற்றுவோராய், ஆர்வலருக்கு அருந்தமிழ்க் கற்பிப்போராய், பத்தராய் பற்பலர், நூற்றுண்டுதோறும் விளங்கினர். ஆனால், இவர்கட்கெல்லாம் முதன்மையாய், முன் மாதிரியாய் இவர்கள் எல்லோரும் திரண்டு ஓர் உருவாய் வந்தவர். தாம் நம் "தமிழ்க்கடல்" இராய. சொ. ஐயா அவர்கள்.

ஐயா, தாம் சுவைத்தவற்றைச் சுவைமாறுமல், சூடு ஆறுமல் அருகிலிருப்பவர்கட்குச் சொல்லிச்சொல்லி இன்புறுவார்கள். கேட்டவரையும் இன்புறுத்துவார்கள். யாரும் நெருங்க அஞ்சும் சிங்கம் போல் இருந்தவர்கள், பின்னுளில் பத்தராய்ப் பச்சிளந் தண்ணீராய் மாறினர். தொண்டு கிழவியும் துடுக்குச் சிறுவரும் நெருங்கிக் குறையிரந்து வேண்டுகை விடுக்குமளவு தவச்சீலராய் மாறினர்; பயன் கொண்டனர். இப்பகுதியினரின் நன்மைக்கு அவர்கள் தம் செல்வாக்கை நன்னர் பயன் படுத்தினர். அவர்கள் தம்புலமை உரைகளை, செயல்களைப் புலவன் என்ற முறையில் கேட்டும் கண்டும் துய்த்துதுய்த்து மகிழ்ந்தவன்யான். அவர்கள் யாத்த "வில்லியும் சிவனும்" என்ற நூல் இயல்பை, இவண் சற்றே காட்டுதல் நோக்கம். சித்திரத்தில் கைப்பழக்கமில்லாதவன் இமயத்தை எங்ஙனம் ஓவியமாக்கல் இயலும்? ஆயின் அம் முயற்சியில் தான் ஈடுபடப்போகிறேன்.

அழகப்பா கல்லூரியின் தமிழ் ஆராய்ச்சித் துறையின் 2ஆவது நூல்தான் "வில்லியும் சிவனும்". 1966இல் ஐயா அவர்கள் இயக்குநராக இருந்து வெளியிட்டார்கள். 260 பக்கத்தை நல்ல கட்டில் ரூபாய் **3.50**க்குக் கொடுத்ததே தமிழ்த்தொண்டன்றி வேறென்ன? இது பிறரால் இயலுமா? திரு. சச்சிதானந்தம்பிள்ளை

தன் முன்னுரையில் ஐயா அவர்களின் பணிகளையும் வரலாற்றையும் வரைந்துள்ளனர். செம்மல் - டாக்டர், வ. சுப. மா. - அவர்கள் பதிப்புரை நல்கியுள்ளனர். நூலில் ஐயாவின் ஆழ்புலமை, இலக்கிய அறிவு, நயஞ்சுட்டும் அறிவு, நினைவாற்றல், சைவப் பற்று, ஆகியவற்றைக் காணலாம். பரிமேலழகர், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்களை ஐயா கற்றவர்கள் ஆதலின், அவர் தம் கூறுகள் - இயல்புகள் இவரது உரையிலும் ஊடுருவக்காணலாம். பண்டிதமணி, இரசிகமணி இவர்கள் தம் போக்கும் உண்டு. நூலைப் படித்தால், நல்ல தமிழ் விருந்துண்ட மனநிறைவு ஏற்படும்.

## நூலமைப்பு

சிவபெருமானைப்பற்றி, வில்லி மொழிந்தவை, 19-பாத்திரங்கள் மொழிந்தவை, சிவனே தன்னைப்பற்றிக் கூறியவை என்ற இச்செய்திகளை 270பாடல்களால் விளக்குவர். சிவனைப்பற்றிய சொற்றொடர் பட்டியல், சிவத்தொடர்பான சொற்றொடர்பட்டியல், பாட்டு முதற்குறிப்பு அகராதி ஆகியவையும் உண்டு. ஒருபாடலைத் தரும்போது அப்பாடலில் சிவனைப்பற்றி வரும் அரிய சொற்றொடரையே அப்பாட்டின் தலைப்பாக்கியுள்ளார். பின்னர், பொழிப்பு, விளக்கம், யார் எவ்விடத்தில் எப்பொழுது கூறிய பாடல் என்ற இம்மூன்று வகையான விளக்கம் தருகிறார்கள். விளக்கியுள்ள முறை வருமாறு....

அ) உரிய பொருள் தருதல்
ஆ) இடத்திற்குரிய சிறப்புப்பொருள் தருதல்
இ) தன்பொருள் நாட்டல்
ஈ) இலக்கணங்கூறுதல்
உ) பொருள் விளக்கம் செய்தல்
ஊ) உவமையை விளக்கல்
எ) நயங்காட்டல்
ஏ) ஒப்புமை காட்டல்
ஒ) தலச்சிறப்புரைத்தல்
ஓ) சைவ சமய உண்மை காட்டித்தன் சைவப்பற்றினைக் காட்டல்

என்ற இப்பத்தழகு ஒழுகுமாறு "வில்லியின் நயத்தை நம்வித்தகர்" கண்டு- விண்டு உரைக்கிறார்கள்.

உரையில் பற்பல நயங்கள் பளிச்சிடுகின்றன. கனிநிறை சோலையில் பசித்தவன் புகுந்தால் எக்கனியை விடுவான்? எதனை உண்பான்? அதே நிலைதான் படிப்போருக்கு வரும். சக்கரைக்கட்டி எப்பக்கமும் இனிப்பது போல், நூல் முழுதும் இனிமைதான். வில்லிக்கு எத்துணை புலமையோ அந்த அளவு ஐயாவின் உரையிலும் புலமை உண்டு. அறிவெல்லாம் திரண்டு வந்தால் யாரே 'ஆற்றவல்லார்? என்றுதான் பாராட்டத்தோன்றுகிறது.

வாழி தமிழ்க்கடலார் புகழ்! அவர்தம் தொண்டு! இந்துமதாபிமான சங்கம் வாழி!






# அறுபத்து ஆறாம் ஆண்டு அறிக்கை

## தலைவர் அவர்களே பெருமக்களே

வணக்கம். நமது சங்கத்தின் 66 ஆம் ஆண்டு அறிக்கையை உங்கள்முன் அளிப்பதில் பெருமகிழ்வு எய்துகிறேன்.

## தோற்றம்

மகாகவி பாரதியின் பாடல் பெற்ற பெருமை மிக்க நமது இந்து மதாபிமான சங்கம், பிங்கள ஆண்டு ஆவணித் திங்கள் 26 ஆம் நாள் (10-9-1917) "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அப்பர் சுவாமிகளின் அருள் வாக்கிற்கேற்ப, அமரர், சொ. முருகப்பா முதலிய இளைஞர்களின் ஆர்வத்தால் எழுச்சியுறத் தோன்றியது, அமரர் தமிழ்க் கடல், இராய. சொ. அவர்களின் பெரு முயற்சியினால் வளம்பெற வளர்ந்து விளங்குகிறது. நம் நாட்டின் பலதுறை வல்லுநர்களும் வருகை தந்து சிறப்பித்துள்ளனர். விவேகானந்தர் நூலகமும், படிப்பகமும் நமது சங்கத்தின் முக்கியப் பணிகள்.

## நோக்கம்

சமயப் பற்று, நாட்டுப் பற்று, மொழிப் பற்று, நல்லோர் கூட்டுறவு, இலக்கிய ஆர்வம் ஆகியவற்றை வளர்த்தல் நமது சங்கத்தின் முக்கிய நோக்கங்களாகும்.

## நிருவாகம்

நமது சங்கத்தின் நிருவாகம், ஒரு தலைவர், ஒரு துணைத் தலைவர், ஒரு செயலாளர், ஒரு துணைச்செயலாளர் ஒருபொருளாளர்

ஆறு நிருவாக உறுப்பினர் ஆகப் பதினொருவர் கொண்ட ஒரு குழுவால் நடத்தப் பெறுகிறது.

## நேரம்

சங்கம் காலை 9 மணி முதல் பகல் 1 மணி வரையிலும், மாலை 4 மணி முதல் இரவு 7 மணி வரையிலும் திறக்கப் பெற்றிருக்கும்.

## கட்டிடம்

நமது சங்கக் கட்டிடக் கால்கோள் விழா 1943இல் திரு. வி. க. தலைமையில் நடைபெற்றது. அன்பர்கள் நிதியுதவியின்பேரில் கட்டப்பட்ட இக்கட்டிடம் மூதறிஞர் இராசாசி அவர்களால் திறக்கப் பெற்றது. தமிழ்க்கடல், இராய. சொ. அவர்களின் பொருள் உதவியால் கட்டப்பட்ட சங்க மேல்மாடி, இராய. சொ. உமையாள் மண்டபம் 1965ல் திறக்கப் பெற்றது.

## படிப்பகம்

தமிழ் ஆங்கில நாளிதழ்கள், வார இதழ்கள், திங்கள் இதழ்கள், வாரமிருமுறை இதழ்கள் சமய வெளியீடுகள் படிப்பகத் திற்கு வருகின்றன. அன்பர் பலர் படித்துப் பயன் பெறுகின்றனர்.

## விவேகானந்தர் நூலகம்

நமது சங்கத்தின் விவேகானந்தர் நூலகம் 1918-ல் நிறுவப் பெற்றது. இலக்கியம், இலக்கணம், சமயம், பொது அறிவு எனப் பல்வேறு துறை அறிவு நூல்கள் இந்நூலகத்தை அழகு செய்கின்றன.

## சங்கக் கட்டிடங்கள்

சமய குரவர் நால்வர் பெயராலும், சேக்கிழார் பெயராலும் உள்ள ஐந்து இல்லங்களிலிருந்து வரும் வாடகை சங்கத்தின் நிலைத்த வருவாயாகும்.

## செயற் குழு

இவ்வாண்டு செயற்குழு 13 முறை கூடிச்சங்கப்பணிகளை நிறைவேற்றியது.

## இரங்கல் தீர்மானங்கள்

இவ்வாண்டு இயற்கை எய்திய நமது சங்கப் புரவலர்களான கண்டனூர், வயி. இராமநாதன் செட்டியார், தேவகோட்டை; அ. மு. முருகப்ப செட்டியார், வாழ்நாள் உறுப்பினர்களான, காரைக்குடி அ. மெ. அ. பழனியப்ப செட்டியார், ஆவி. பழ. சித. இராமநாதன் செட்டியார், உறுப்பினர் இராம. வள்ளியப்ப செட்டியார் ஆகியோர் மறைவு குறித்து இரங்கல் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## பாரதி விழா

12—7—83 திங்கள் மாலை, சங்கத் தலைவர் அபிசீனியா பழ. நாச்சியப்பன் அவர்கள் வரவேற்புரைக்குப் பின், தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமையில் திருவாளர்கள் எம். எஸ் மெய்யப்பன், சித. சிதம்பரம், M.L.A. அழ. வள்ளியப்பா அன்பு. வேதாசலம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். மேற்படி விழாவில் சங்கீத கலாநிதி, திருமதி. எம். எஸ். சுப்புலெட்சுமி அவர்கள் பாடிய பாரதி பாடல் இசைத் தட்டு வெளியிடப்பெற்றது.

தொடர்ந்து 7 மணிக்கு நடைபெற்ற பட்டி மண்டபத்தில் இணைச்செயலர் நா. மீனவன் வரவேற்புரைக்குப் பின் அடிகளார் தலைமையில், "பாரதி தன் இலட்சியம நிறைவேறப் பெரிதும் வேண்டியது," "காளியிடமா, கண்ணனிடமா" என்ற பொதுத் தலைப்பில் முறையே திருவாளர்கள், சோம. சிவப்பிரகாசம், அரு. நாகப்பன், தி. சு. மலையப்பன், மா. கண்ணப்பன், சுப. கதிரேசன், ச. சவகர்லால் ஆகியோர் வாதிட்டனர். செயலர். அரு. ராம. முத்துராமன் அவர்களின் நன்றியுரைக்குப் பின் கூட்டம் இனிது நிறைவடைந்தது.

## ஆண்டு விழா

நமது சங்க ஆண்டு விழா 17—10—1983 திங்கள் மாலை 5 மணிக்கு நகரச் சிவன் கோவிலில் நடைபெற்றது. தலைவர் அபிசீனியா பழ. நாச்சியப்பன் அவர்கள் வரவேற்புரை கூறினார். தமிழ்க்கடல், முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள் தலைமை யுரைக்குப்பின் பாஞ்சாலி சபதம் என்ற தலைப்பில் திரு. தெ. முருகசாமியும், கண்ணகி சபதம் என்ற தலைப்பில் திரு. மா.

கண்ணப்பன் அவர்களும் சொற்பொழிவாற்றினர். தலைவர் முடிவுரைக்குப் பின் செயலர் அரு. ராம. முத்துராமன் அவர்கள் நன்றி கூறக் கூட்டம் நிறைவடைந்தது.

## பிரதோஷ நிகழ்ச்சிகள்

இறையுணர்வும், இந்து மதமும் வளர வேண்டுமென்ற நோக்கில் இவ்வாண்டு சங்கச் சார்பில் நகரச் சிவாலயத்தில் ஒவ்வொரு பிரதோஷம் தோறும் தமிழன்பர்கள் பலர் உரை ஆற்றினர். உரையாற்றியோர் பற்றிய விவரங்கள் :

| | | | |
|---|---|---|---|
| 1 | 12—12—82 | சம்பந்தர் | தமிழ்க்கடல் முரு. பழ. இரத்தினம் செட்டியார் |
| 2 | 28—12—82 | அப்பர் | பாலகவி இராமநாதன் செட்டியார் |
| 3 | 11—1—83 | சுந்தரர் | தமிழ்க்கடல் முரு. பழ. இரத்தினம் செட்டியார் |
| 4 | 26—1—83 | மணிவாசகர் | ,, ,, |
| 5 | 10—12—83 | காரைக்கால் அம்மையார் | டாக்டர் வெ. சு. அழகப்பன் |
| 6 | 25—2—83 | கண்ணப்பர் | தெ. முருகசாமி, தமிழ்க்கல்லூரி முதல்வர் |
| 7 | 26—3—83 | சிறுத்தொண்டர் | புலவர்மணி நா. மீனவன் |
| 8 | 10—4—83 | அருணகிரிநாதர் | டாக்டர் அர. சிங்கார வடிவேலன் |
| 9 | 24—4—83 | திருநீலகண்டர் | நீதிபதி முத்துவயிரவன் |
| 10 | 10—5—83 | தேவார இசை | புலவர் வை. சு. ஆறுமுகம் |
| 11 | 24—5—83 | மெய்ப்பொருள் நாயனார் | முதல்வர் தெ. முருகசாமி |
| 12 | 8—6—83 | முருகனும் புலவனும் | சோம. சொரூபானந்த சுவாமிகள் |
| 13 | 22—6—83 | மங்கையர்க்கரசி | பேராசிரியர் நா. சுப்பிரமணியன் |
| 14 | 8—7—83 | அர்ச்சுனன் தவநிலை | முரு. பழ. இரத்தினம் செட்டியார் |

| | | | |
|---|---|---|---|
| 15 | 22—7—83 | பட்டினத்தார் | தமிழ்க்கடல் முரு. பழ. இரத்தினம் செட்டியார் |
| 16 | 20—8—83 | அப்பூதியடிகள் | பேராசிரியர் க. தியாகராசன் |
| 17 | 4—9—83 | பகவத்கீதை | சுவாமி இரவீந்திரர். |
| 18 | 19—9—83 | இளையான்குடி மாறன் | மக்கள்கவிஞர் அரு. நாகப்பன் |
| 19 | 2—11—83 | ஆண்டாள் திருமணம் | செல்வி மணிமேகலை |
| 20 | 18—11—83 | இயற்பகை நாயனார் | புலவர்மணி மா. முத்துராமன் |
| 21 | 17—12—83 | காசி இராமேசுவரம் | காசிஸ்ரீ. அரு. சோமசுந்தரன் |

## வேண்டுகோள்

இப்பகுதி மக்களின் விழிப்புணர்ச்சிக்குக் காரணமாக விளங்கும் இச்சங்கம் மேலும் மேலும் வளர்ச்சி பெற்று பல நற்பணி புரியப் பலரும் புலவராகவும், ஆயுள் உறுப்பினராகவும் சேர்ந்து பங்கேற்கும்படி பணிவுடன் வேண்டுகிறோம்.

நமது சங்கத்தைப் பல்லாண்டுகளாகப் பேணி வளர்த்த பெரியோர்கட்கும், புரவலர்களாயும் உறுப்பினர்களாயும் இருந்து ஊக்கமளித்த அன்பர்கட்கும், புத்தகங்கள், பொருள் தந்து ஆக்கம் அளித்தவர்கட்கும், விழாக்களில் தலைமை ஏற்றும், பங்கு பெற்றும் அரும்பணி புரிந்த தமிழ்ப் பெருமக்கட்கும், சங்க வளர்ச்சிக்கு உறுதுணை அளிக்கும் அனைவர்க்கும் நன்றிகூறி மகிழ்கிறோம்.

**அரு. ராம. முத்துராமன்.**
செயலாளர்.

காரைக்குடி
7—1—84

ஓம்

# இந்து மதாபிமான சங்கம், காரைக்குடி.

## 21—9—82 உ முதல் 31—12—83 வரை ஐந்தொகை

| | ரூ. | பை. | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| 5 மூலதனக் கணக்கு | 149370 | 13 | | |
| 7 ஆதாய வரவு | 125 | 05 | | |
| 14 வட்டி வரவு | 5630 | 04 | | |
| 16 நன்கொடை வரவு | 1672 | 00 | | |
| 17 நுழைவுக்கட்டணம் வரவு | 19 | 00 | | |
| 19 புரவலர் கொடை வரவு | 300 | 00 | | |
| 21 வாழ்நாள் உறுப்பினர் வரவு | 1400 | 00 | | |
| 25 உறுப்பினர் சந்தா வரவு | 126 | 00 | | |
| 35 செக்காலை நால்வர் இல்லம்வாடகைவரவு | 7298 | 00 | | |
| 38 செக்காலை சேக்கிழார் இல்லம் வாடகை வரவு | 1400 | 00 | | |
| 41 கூடம் கட்டடம் முன் பணம் வரவு | 1050 | 00 | | |
| 42 இராய. சொ. நினைவுநாள் டிபாஸிட் | 3500 | 00 | | |
| 43 சங்கக் கட்டடம் கொள்முதல் | | | 37013 | 94 |
| 45 செக்காலை நால்வர் இல்லம் கொள்முதல் | | | 51046 | 67 |
| 46 செக்காலைசேக்கிழார் இல்லம்கொள்முதல் | | | 9854 | 25 |
| 47 மதுரை வங்கி சேர் கொள்முதல் | | | 7500 | 00 |
| 49 விவேகாநந்தர் | | | 1570 | 94 |
| 51 சாமான் கொள்முதல் | | | 7328 | 69 |
| 53 இடம் வாடகை முன்பணம் | | | 30 | 00 |
| 54 மின்சார இலாக்கா முன்பணம் | | | 490 | 00 |
| 55 மதுரை வங்கி டிபாசிட் கணக்கு | | | 3500 | 00 |
| 57 கும்பகோணம்சிட்டி யூனியன் பேங்க்டிபாஸிட் | | | 6000 | 00 |
| 59 பாங்க் ஆப் மதுரை டிபாஸிட் | | | 7000 | 00 |
| 61 மதருஸ் ஏசியன் டிராவல்ஸ் பற்று | | | 16000 | 00 |
| 66 மதுரை வங்கி சிறு சேமிப்பு கணக்கு | | | 1491 | 33 |
| 70 தி கும்பகோணம் சிட்டி யூனியன்பேங்க்கணக்கு | | | 1828 | 00 |
| 76 சங்ககட்டிட இடவாடகை கணக்கு பற்று | | | 330 | 00 |
| 79 65வது ஆண்டுவிழா செலவு ரூ 3499. 05ம் 66வதுஆண்டு விழா செலவு ரூ 679. 20ம் ஆக | | | 4178 | 25 |
| 82 மின்கட்டண செலவு | | | 125 | 40 |

| | | |
|---|---|---|
| 83 நகராட்சி வரிச்செலவு | 1403 | 40 |
| 88 பத்திரிக்கை சந்தா செலவு கணக்கு | 961 | 65 |
| 93 சிப்பந்திகள் சம்பள செலவு | 3525 | 00 |
| 103 பல்வகை செலவு | 1111 | 60 |
| 109 அச்சுக் கூலி | 198 | 80 |
| 120 மராமத்து செலவு | 2717 | 65 |
| 129 இந்துசமய இலக்கியசொற்பொழிவுசெலவு | 1438 | 40 |
| 143 பாரதிஇசைதட்டுவெளியீட்டு&பாரதி விழா செலவு | 440 | 35 |
| 144 இராய. சொ. சிலைத்திறப்பு விழா கணக்கு | 1500 | 00 |
| 145 சங்ககட்டிடம் வர்ணம் வைக்கும் கணக்கு | 3000 | 00 |
| குறிப்பு இருப்பு | 305 | 90 |
| 171890—22 | 171890—22 | |

குறிப்பு பேரேடு ஆதரவு தஸ்தாவேஜுகள் அனைத்தும் சரியாக உள்ளன.

**பழ. நாச்சியப்பன்**
தலைவர்.

**அரு. ராம. முத்துராமன்**
செயலாளர்.

## இந்து மதாபிமான சங்கம், காரைக்குடி.

## 21—9—82 முதல் 31—12—83 வரை வரவு செலவு கணக்கு

| வரவு | ரூ. | பை | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| | 125 | 05 | | |
| ஆதாய வரவு கணக்கு | 5630 | 04 | | |
| வட்டி வரவு | 1672 | 00 | | |
| நன்கொடை வரவு | 19 | 00 | | |
| நுழைவுக்கட்டணம் வரவு | 300 | 00 | | |
| புரவலர் கொடை வரவு | 1400 | 00 | | |
| வாழ்நாள் உறுப்பினர் வரவு | 126 | 00 | | |
| உறுப்பினர் சந்தா வரவு | 7298 | 00 | | |
| செக்காலை நால்வர் இல்லம் வாடகைவரவு | 1400 | 00 | | |
| சேக்கிழார் இல்லம் வாடகை வரவு | | | 330 | 00 |
| சங்க கட்டிட இடவாடகை கணக்கு பற்று | | | | |

| | | |
|---|---|---|
| 65வது ஆண்டு விழா செலவு ரூ 3499—05ம் | | |
| 66வது ஆண்டுவிழா செலவு ரூ 679—20ம் ஆகரு | | 4178 25 |
| மின்கட்டண செலவு | | 125 40 |
| நகராட்சி வரி செலவு | | 1403 40 |
| பத்திரிக்கை சந்தா செலவு | | 961 65 |
| சிப்பந்திகள் சம்பளச் செலவு | | 3525 00 |
| பல்வகை செலவு கணக்கு | | 1111 60 |
| அச்சுக்கூலி செலவு | | 198 80 |
| மராமத்து செலவு | | 2717 65 |
| இந்துசமய இலக்கிய சொற்பொழிவு செலவு | | 1438 40 |
| பாரதி இசைதட்டு வெளியீட்டு&பாரதி விழா செலவு கணக்கு | | 440 35 |
| (மூலதனலாபம்) மூலதனக் கணக்கு வசம் | | 1539 59 |
| | 17970—09 | 17970—09 |

மேற்படி வரவு சிலவு கணக்கிற்கு ஆதரவாக குறிப்பு, பேரேடு தஸ்தாவேஜுகள் அனைத்தும் வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

**பழ. நாச்சியப்பன்**
தலைவர்

**அரு. ராம. முத்துராமன்**
செயலாளர்

**VS. இராமசாமி.**
கணக்கு தணிக்கையாளர்.

**21—10—82 முதல் 31—12—83 வரை ஐந்தொகை**

| | | |
|---|---|---|
| மூலதனக் கணக்கு | 150909 72 | |
| இடம் கட்டிடங்களின் முன்பணம் வரவு | 1050 00 | |
| இராய. சொ. நினைவுநாள் டிபாஸிட் வரவு | 3500 00 | |
| சங்க கட்டிடம் கொள் முதல் | | 37013 94 |
| செக்காலை நால்வர் இல்லம் கொள்முதல் | | 51046 67 |
| செக்காலைசேக்கிழார் இல்லம் கொள்முதல் | | 9854 25 |
| மதுரை வங்கி சேர் கொள்முதல் பற்று | | 7500 00 |
| விவேகானந்தர் நூலகம் கொள்முதல் | | 1570 94 |
| சாமான் கொள்முதல் | | 7328 69 |
| இடம் வாடகை முன்பணம் | | 30 00 |

| | | |
|---|---|---|
| மின்சார இலாக்கா முன்பணம் | 490 | 00 |
| மதுரை வங்கி டிபாஸிட் கணக்கு | 3500 | 00 |
| கும்பகோணம்சிட்டியூனியன்பேங்கடிபாஸிட் | 6000 | 00 |
| பாங்க் ஆப் மதுரை டிபாசிட் கணக்கு பற்று | 7000 | 00 |
| மதுரை ஏசிஎன் டிராவல்ஸ் (VIP) பற்று | 16000 | 00 |
| மதுரை வங்கி சிறுசேமிப்பு கணக்கு பற்று | 1491 | 33 |
| தி கும்பகோணம்சிட்டியூனியன்பேங்S/Bகணக்கு | 1828 | 00 |
| இராய. சொ. சிலைதிறப்பு விழாகணக்கு | 1500 | 00 |
| சங்க கட்டிடம் வர்ணம் வைக்கும் கணக்கு | 3000 | 00 |
| குறிப்பு இருப்பு | 305 | 90 |
| 155459–72 | 155459–72 | |

V. S. ராமசாமி
கணக்கு தணிக்கையாளர்

கணக்குகள் அய்ந்தொகை லாப நஷ்ட கணக்கு பரிசீலிக்கப்பட்டன. குறிப்பு பேரேடு இதர தஸ்தாவேஜுகள் அனைத்தும் சரியாக உள்ளன.

வட்டி வரவில் முக்கியமாக ஏஷியன் டிராவல்ஸ் கம்பெனியிலிருந்து பழைய வட்டி பாக்கிக்காக ரூ. 2000/– வரவாகி இருக்கிறது. இதுவும் 81 அக்டோபர் மாதம் வரை உள்ள ஷேர் டிவிடெண்டுக்கு பிடித்த 82 செப்டம்பர் மாதம் வரை உள்ள ரூ. 559/–வரியை வருமான வரி ஆபிஸிலிருந்து ரீபண்டு வாங்கி கணக்கில் வரவுவைத்து இருக்கிறது. சிலவு இனங்களில் பலவகை சிலவில் பொதுவாக மகாசபை கூட்டம். நிர்வாக சபை கூட்ட சிலவுகளுடன் சாதாரண சில்லரை சிலவுகளும் சேர்ந்து இருக்கிறது.

ஆண்டு விழா சிலவிலும் 65ம் ஆண்டு விழா செலவும் 66ம் ஆண்டு விழா சிலவு ரூ. 679–20 சேர்ந்திருக்கிறது.

மராமத்துசிலவு:- நமது சங்கத்திற்கு சொந்தமான எல்லா கட்டிடங்களையும் சில்லரை மராமத்து பம்புசெட் மோட்டார் பைப் ரிப்பேர் சிலவு செய்து இருக்கிறது.

எல்லா சிலவுகளும் போக நிகர லாபம் ரூ. 1539–59 லாபம் கூட்டி மூலதனத்துடன் சொத்து இருக்கிறது.

நமது சங்க கட்டிடம் பூராவும் வர்ணம் வைப்பதற்கு ரூ. 3000/-மும், இராய. சொ. அவர்கள் சிலை திறப்பு விழா சிலவிற்காக ரூ. 1500/ம் கணக்கில் பற்று எழுதி எடுத்துவைத்து இருக்கிறது.

மேலும் பிரதி மாதம் கூடும் நிர்வாக சபை கூட்டம் நடந்து அதில் அந்தந்த மாத கணக்குகளும் அங்கீகரிக்கப்பட்டு இருக்கின்றன.

பொதுவாக காரியதரிசி அவர்கள் நல்லமுறையில் நடவடிக்கைகள் நடத்தி இருப்பது மகிழ்ச்சிக்குரியது.

**VS. ராமசாமி,**
கணக்கு தணிக்கையாளர்

**அரு. ராம. முத்துராமன்**
செயலாளர்

**பழ. நாச்சியப்பன்**
தலைவர்

## 66 ஆம் ஆண்டு செயற்குழு

1 திரு. அபிசீனியா பழ. நாச்சியப்பன், தலைவர்
2 ,, கா. அரு. கா. காடப்பசெட்டியார், துணைத்தலைவர்
3 ,, அரு. ராம. முத்துராமன், செயலர்
4 ,, நா. மீனவன் துணைச்செயலர்
5 ,, வ. ராம. இராமசாமிசெட்டியார், பொருளாளர்
6 ,, சித. ராம. சித. சிதம்பரம்செட்டியார்
7 ,, அரு. மு. மு. அருணாசலம்செட்டியார்
8 ,, ஆ. வி. ப. சபாபதிசெட்டியார்
9 ,, அ. முருகப்பசெட்டியார்
10 ,, அரு. நாகப்பன்
11 ,, லெ. கணேசன்

கணக்குத் தணிக்கையாளர்கள்

**திரு. N. நாகராஜன் C. A.**
**திரு. V. S. ராமசாமி அய்யங்கார்**

# 67-ஆம் ஆண்டு செயற்குழு

1 திரு. அபிசீனியா பழ நாச்சியப்பன், தலைவர்
2 திரு பெரி. அரு. அருணாசலம் செட்டியார், துணைத்தலைவர்
3 ,, அரு. ராம. முத்துராமன், செயலர்
4 ,, M. V. M. மெய்யப்பச்செட்டியார், துணைசெயலர்
5 ,, நா. மீனவன், பொருளாளர்
6 ,, AL. இராமநாதன்செட்டியார்
7 ,, டாக்டர் வெ. சு. அழகப்பன்
8 ,, கரு. கதி. கருப்பன்செட்டியார்
9 ,, லெ. கணேசன்
10 ,, அ. ராம. அ. லெ, அ. மு. வீர. முத்துவீரப்பசெட்டியார்
11 ,, CT. L. சிதம்பரம்செட்டியார்

கணக்குத் தணிக்கையாளர்கள்

**திரு N. நாகராஜன் C. A.**
**திரு VS. ராமசாமிஅய்யங்கார்**



# தமிழ்க்கடல் ராய. சொ. சிவபதவி அடைந்த நிலை



*தோற்றம் : 30—10—1898* *மறைவு : 30—9—1974*



கோதற்றபக்தி
அறுபத்துமூவர் தம்
கூட்டத்திலோ:
தீதற்ற வெள்ளிச்
சிலம்பகத்தோ செம்பொன்
அம்பலத்தோ:
வேதத்திலோ சிவ
லோகத்திலோ விஸ்வ
நாதன் இரு:
பாதத்திலோ சென்று
புக்கான் பழுதில்
பாவலனே!



R. PADMANABHAN

உ
சிவமயம்

5, SHARDA
Plot No. 7 SECTOR II
CHHEDA NAGAR
BOMBAY-400 089.

# ஆசானுக்கு நினைவாஞ்சலி

செந்தமிழ் கற்றுத் தேர்ந்து,
தெவிட்டரு சுவையை மாந்திப்
பைந்தமிழ் என்இல் பாக்கள்
பதிந்தநன் நினைவின் செம்மல்;
தந்தைபோல் குற்றம் சுட்டி,
தாயென அணைக்கும் சால்பன்;
எந்தை,எம் ராய. சொக்க-
-லிங்கனின் ஏற்றம் என்னே!

உன்னத நோக்கம் பூண்டே
'ஊழியன்' என்ற ஏட்டால்
தன்னலம் அற்ற பாங்கில்
தமிழினம் வீறு கொள்ள,
பன்னலம் கொழிக்கு மாறும்
பலவகைப் பணிகள் செய்தோன்;
துன்பமார் சிறையும் சென்றோன்
சுதந்திரம் தேயம் கூட.

தேசநற் தந்தை யான
செம்மலாம் காந்தி யைத்தன்
வாசநல் இல்ல ழைத்து
வகையினிற் உண்டி ஊட்டி,
ஆசையின் அளவ ளாவி,
அவர்பெயர் ஆண்டைக் கொண்டோன்;
பாசமார் தேச பக்தன்
பண்புகள் பேசப் போமோ?

காந்தியின் பாலே பூண்ட
கணக்கறு பக்தி யாளன்;
மாந்துநல் இன்பம் ஊற,
காந்தியின் மாண்பை எல்லாம்
ஆந்தணப் பேசும் இன்பான்;
அருங்கவி மாலை கட்டி
ஏந்திநில் புலமைச் செம்மல்;
என்குரு ராய. சொ. வாழி!

பரமனின் சிந்தை விந்தை
பகர்ந்திட ஒண்ணு மோதான்?
அரசியல் வாழ்வை விட்டே
அண்ணல் ராய. சொ.வும் பக்தி
விரவிநில் பனுவல் உள்ளே
மிக்கவும் மூழ்கி ஆழ
விரைந்தனன் முழுமூச் சோடே;
விளைவுகள் தமிழின் பேரும்.

தன்பதி, அதனைச் சுற்றிச்
சார்ந்துநில் ஊர்கள் எல்லாம்
நன்மைகொள் நாட்டத் தோடு
நகரதின் ஆட்சி மன்றம்
துன்னினன் தலைமை ஏற்றே;
சொல்லரு நலன்கள் செய்தான்;
அன்றவன் ஆட்சிச் சீரை
அன்பர்கள் உரைப்பார் இன்றும்.

இந்துமத அபிமான சங்கம் ஏட்டில்
இசைகொள்ள அரும்பணிகள் பாங்கிற் செய்தோன்,
பைந்தமிழின் நலக்கடலுள் மூழ்கி, ஊட்டச்
செழிப்புமிக்கான்; பாரதியின் பண்பார் நட்பை
எந்தையார் ராய. சொ தான் பெற்ற பேற்றை
இன்றுயாம் புகைப்படத்தில் காண்கின் றோமே;
செந்தமிழின், பக்திநெறியின் வல்லோர், மேலோர்
திரண்டுவந்து சங்கத்தில் பேச வைத்தான்.

உரைமேடை ஏறிநிற்கும் இளைஞர் தம்மின்
ஊக்கமார் உரை,பாடும் பாடல் தம்மில்
புரைகண்டு, சுட்டிப்பின் நேயம் காட்டிப்
புகழ்பெறுமா நெறிமுறையின் பேணி. ஊக்கி,
நிரைநிரையாய் உரையாளர் படைகள் சேர்த்தோன்;
நீடுபுகழ் இன்றையப்பல் பேச்சா ளர்தாம்
உரைஇதனைத் தாமுரைத்து மகிழ்வார்; அந்த
உத்தமன்சீர் உன்னஉன்ன இன்பம் தானே.

அண்ணலாம் ராய.சொ.தான் உவமை இல்லா
அரியதமிழ்க் கடல்' ஆனுன்; அன்னுன் பக்தி
மண்டிவினை சிவபூசை செய்யும் நேர்த்தி
வளமென்னே! தூய்மைசூழ் நிலைதான் என்னே!
தொண்டரெலாம் 'சிவமணி'யாம் பட்டம் சூட்டி,
சொல்லரிய 'சிவம்பெருக்கும் சீலர்' என்றும்,
நண்ணரிய இன்பில்,நா ஆரச் செப்பி
நாவன்மை, பலநலன்கள் நண்ணி ஞரே.

பத்திகொழிப் பனுவலெனும் ஆழி மூழ்கிப்
பளிச்சிட்ட பாடல்சீர் முத்தெ டுத்து.
வித்தகமாத் தொடுத்துப்பேர் பலவும் சூட்டி,
மிக்கெடுப்பாய் பாமாலை ஈந்த வள்ளல்;
அத்தைஎலாம் படிப்போர்க்கு விளங்கும் பாங்கில்
அருமைமிகச் சீர்பிரித்து, உரைகள் கூட்டி,
மெத்தநனி பணிபுரிந்த ராய. சொ. செம்மல்
விதம்விதமாய் பத்தருளம் திகழ்வான் மாதோ!

கம்பனிலும் வில்லியிலும் ஆழ்ந்த ஆய்வான்;
கடல்கடந்து தென்தமிழின் சீரைச் சொன்னேன்;
நம்பரிய வகையினிற் மேறகோள் காட்டும்
நன்னினைவு, பொருத்தமிவை குடிகொள் நாவான்;
வெம்பகையும் தமிழ்ச்சீரைப் பேசி விட்டால்
வெறுப்பெலாம் மறக்குநல நெஞ்சன்; நேசன்;
அம்புவியில் தமிழ்க்கென றும், அன்பிற் கென்றும்
அரும்பணிகள் ஆற்றஎன்றும் ராய.சொ. வந்தான்

கவிநலங்கள் குடிபுகுந்த கவிஞன் ஆனேன்;
கம்பனுக்கா, பிறபுலவர் காகக் கூடும்
கவியரங்கத் தலைமையான்; அங்கே தானும்
கவினுறவே கவிபாடி மகிழ வைப்போன்;
சவியுறவே தூவெள்ளைக் கதரின் ஆடை
சட்டையுடனே அவன்தோற்றம் மதிப்பை ஏற்கும்;
சவைமகிழ உரத்தகுரல் அழுத்தி, சுட்டு
விரலாட்டும் தமிழாளி ராய. சொ. வாழி!

அறப்பணிகள் ராய. சொவின் அன்பார் மூச்சு
ஆங்காங்கே உளகோயில் செல்லல் அன்னூன்
மறவாமே கொள்திட்டம்; திருத்த லங்கள்
வழிபட்டு, மெய்யடியார் ஆங்கு 'பாங்காய்
உறுவகையாய், நூலெழுதித் தொண்டு செய்தோன்;
உரியதலப் பாடலெலாம் பாடச் சொல்வான்;
முறையாக எதையும்செய் திட்ட ஞானி
முழுமையாய்ச் செயலிலாழ் ராய. சொ. தானே.

இறைமணக்கும் கோயிலிடைக் கண்ட, கேட்ட
எண்ணிலா நெறிமுறையின் தவற்றைச் செப்ப
நிறைசெய்யும் நன்நோக்கால் நிருவா கத்துள்
நேரடியாக் கலந்து கொண்டு ராய.சொ.செய்த
குறைவிலாப் பணியையெலாம் குடமு ழக்கே
கூறுமன்றோ? நிரந்தரமாய் வருமா னங்கள்
நிரைநிரையாய் அவன்சேர்த்த பாணி எல்லாம்
நீடுபுகழ் நகரத்தார் சிறப்பின் சீலம்

தன்முன்னோர் எழுப்பிட்ட கோயில் தன்னில்
தகவாக நடராச அபிடே கத்தை
இன்பமுறக் கண்டுகந்து மீள்க ளிப்பில்,
ஈசனையே எண்ணிஎண்ணி வந்தான் போலும்!
தன்னிடத்தும் சிவமணிபோல் தொண்டன் வேண்டி
சடக்கென்று ராய. சொ. வை ஈசன் ஈர்த்தான்
தன்னடிக்கே; சிவனடிக்கீழ் மகிழ்ந்து வாழும்
ராய. சொவின் தாள்மலர்கள் போற்றி! போற்றி!

இந்துமத அபிமான சங்க அன்பர்,
ஏனையராம் ராய. சொவின் சீடர், மற்றோர்
வந்தனையாய் அன்னூர்க்குச் சிலை எடுத்து
மகிழ்விழாக் கொண்டாடும் நாளில் நானும்
எந்தைதனை, என்குருவை ஏத்திப் போற்றி
இவ்விழா வில்உளத்தால் கலந்து நிற்பேன்;
எந்தையவன் எங்கிருந்தும் சீடர் ஆற்றும்
எழிற்பணியைச் சிறப்பிப்பான்; மகிழ்வான்; மாதோ!

முன்பாக அமைந்துள்ள



*சிவமணி, சிவம்பெருக்கும் சீலர், வண்கவி வள்ளல்,*

**தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களின்**

**திருவுருவச் சிலை**

*திறப்பு விழா : 22—1—84*

தமிழ்க்கடல் இராய. சொ. திருவுருவச்சிலை திறப்புவிழா (22–1–84) திரு. வி. க. கலையரங்கில்



இடமிருந்து : சா. நா. அ. சொ. அண்ணாமலை செட்டியார், குன்றக்குடி அடிகளார், சிலம்புச்செல்வர், ம. பொ. சி., மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன், சித. சிதம்பரம், எம். எல். ஏ., அபிசீனியா. பழ. நாச்சியப்பன் (தலைவர் இ.ம.ச.) புலவர் மணி, நா. மீனவன், (துணைச்செயலர் இ.ம.ச) பின்புறம்: ஆவி.ப.சபாபதிசெட்டியார், அரு. முத்துராமன் (செயலர் இ. ம. ச.) டாக்டர்சரஸ்வதிஇராமநாதன்.




"தென்னா(டு) உடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி"

— திருவாசகம்.

சிவமணி, சிவம்பெருக்கும் சீலர், வண்கவிவள்ளல்
தமிழ்க்கடல், இராய. சொ. அவர்களின்

# திருவுருவச் சிலை திறப்பு விழா

## ஒன்பதாம் ஆண்டு நினைவு விழா அழைப்பிதழ்

---

நிகழ்ச்சி நிரல்:

22—1—84 ஞாயிறு

காலை 7 மணி: தேவார இன்னிசை - கலியாண சுந்தரதேசிகர், நாராயண ஓதுவார் குழுவினர்

காலை 9 மணி: தமிழ் வாழ்த்து

திருவுருவச்சிலை திறப்பு: மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள்

மலர் வணக்கம்: ஸ்ரீ மீனாட்சி பெண்கள் மேல்நிலைப் பள்ளி மாணாக்கியர்

தலைவர் : சிலம்புச் செல்வர், மாண்புமிகு, டாக்டர்,
**ம. பொ. சிவஞானம் அவர்கள்**
( தமிழக மேலவைத் தலைவர் )

இறை வணக்கம் : புலவர் **வை சு. ஆறுமுகம்**

வரவேற்புரை : அபிசீனியா **பழ. நாச்சியப்பன்** தலைவர் (இ. ம. ச.)

தலைவர் முன்னுரை : சிலம்புச் செல்வர் **ம பொ. சி.** அவர்கள்

சிலைதிறப்புரை : மாண்புமிகு அமைச்சர் **இராம. வீரப்பன்** அவர்கள்
(செய்தி, அறநிலையத் துறை)

நினைவு மலர் வெளியீடு : தவத்திரு **குன்றக்குடி அடிகளார்** அவர்கள்

சிலை நன்கொடையாளர்களான :

**திரு. சா. நா. அ. சொ அண்ணாமலை செட்டியார்** காரைக்குடி
**திரு. அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார்** கோட்டையூர்
**திரு. ப. வ ராம குழந்தையன் செட்டியார்** இராயவரம்
மூவரையும் பாராட்டல்.

சிலைவடித்த, சென்னை, நந்தனம் **ஆர். செகநாதனுக்குப்**
பொன்னாடை அணிவித்துப் பாராட்டல்

சொற்பொழிவு :

வாழ்த்துரை : சித்தாந்த வித்தகர் **முரு. பழ. இரத்தினம் செட்டியார்**

பாராட்டுரை : **சித. சிதம்பரம்,** எம். எல். ஏ.

பாசவுரை : டாக்டர் **சரசுவதி-இராமநாதன்**

மகிழ்ச்சியுரை : சிந்தாமணிச் செம்மல் புலவர் **மு. இராமசாமி**

நன்றியுரை : **அரு. ராம. முத்துராமன்,** செயலர். (இ. ம. ச.)

தேசியகீதம் : **ஸ்ரீ மீ. பெ. மேல்நிலைப்பள்ளி மாணாக்கியர்**

## மாலை நிகழ்ச்சி – வழக்காடு மன்றம்

மாலை 6 மணி

நடுவர் : சித்தாந்த வித்தகர் **முரு. பழ. இரத்தினம் செட்டியார்**

பொருள் : **“ பாரதத்தில் கண்ணன் செயல்கள் குற்றமுடையன ”**

வழக்குத் தொடுப்பாளர் : **திரு. பழ. கருப்பையா**

எதிர்வழக்காடுபவர் : புலவர்மணி **மா. முத்துராமன்,** எம். ஏ.,

நன்றியுரை : புலவர்மணி **நா. மீனவன்,** துணைச்செயலர் (இ.ம.ச.)

ஓம்

தமிழறிஞர்

# திரு. ராய. சொக்கலிங்கனுர் அவர்கட்கு

மணிவிழாவில் மனமுவந்தளித்த

# வா ழ் த் து ரை

மூவேந்தர் குறுமன்னர் ஆட்சிக் கப்பால்
முதறிஞர்ப் புரந்துதமிழ் காத்து மூத்த
பாவேந்தர் பாரதியார் போற்றி வாழ்த்திப்
பாமாலை சூட்டியஇச் சங்கந் தன்னில்
காவேந்தர் வியப்பெய்த நடக்கும் இந்தக்
கலைக்கடலில் திளைத்தமுனி சொக்க லிங்க
நாவேந்தர் மணிவிழாச் சிறப்புக் காணும்
நல்லவர்க்குக் குழுவினர்தம் வணக்கம் சால.

காந்திப்பா மாலையெனும் நூல்க ளாலே
கவிபாடும் நூலாசான் என்னக் கண்டோம்.
ஏந்திசைகொள் இலக்கியங்கள் சொல்லு மாற்ருல்
இணையில்லாப் பேராசான் என்னக் கண்டோம்.
சாந்திதரு தெய்வப்பா தொகுத்த தாலே
தக்கவொரு தொகுப்பாசான் என்னக் கண்டோம்.
ஈந்ததொகை விளக்கஉரை செய்த தாலே
இனியவொரு உரையாசான் என்றும் கண்டோம்.

நாட்டடிமை தீராத நாட்டின் வாழ்வு
நன்றாகா தெனத்திரண்ட நல்லா ரோடு
வாட்டயலார் ஆட்சிதனிற் சிறையுஞ் சென்றாய்;
வன்தொண்டர் வ உ. சி. தோழ னானாய்;
நாட்டமிகு முருகப்பா துணைவ னாக
நற்செய்தி 'ஊழியனை' நடத்திப் போந்தாய்;
காட்டாக நகராண்மைத் தலைமை யேற்றுக்
காரைநகர் சீர்மைபெற ஆட்சி செய்தாய்.

உள்ளத்தே உயர்வாய தூய்மை எண்ணி
உலகிற்குத் தோற்றத்தால் எளியை ஆவை;
கள்ளத்தார் செயல்கண்டு கனல்வை யேனும்
களங்கமிலா நெறியவர்க்குக் கனியே போல்வை;
எள்ளலிலாப் புகழேந்தி இனித்த வள்ளல்
ஏற்றதிருப் பேரறிஞன் அழகப் பாவே
உள்ளத்தால் உவந்துதனக் காசான் என்னின்,
உன்னுடைய பேறுதனக் குவமை யுண்டோ?

திரைகடலைக் கடந்துபல தேயம் சென்று
திறனறிந்தாய், சமயமுரண் சிறிது மின்றி,
புரைகடந்த அரனரியின் தலங்கள் யாவும்
புகுந்திறைஞ்சி அருள்மறையின் தெளிவு பெற்றாய்;
நரைதிரையைக் கடந்துபிற வாழி நீந்த
நாயன்மார் ஆழ்வார்தம் பாக்கள் தம்மை
உரைதொடுத்துத் தேனாக அமுத மாக
உவந்தளித்தாய்; உன்சமயப் பொதுமை வாழி.

தண்ணூர்ந்த தமிழ்க்கடலே! சான்றோர் பல்கத்
தகைசான்ற இந்துமதச் சங்கம் கண்டோய்!
பண்ணூர்ந்த இலக்கியங்கள் பரப்பும் செம்மால்!
பரமனடி மறவாத ஒழுக்கம் பேணும்
கண்ணூர்ந்த குணக்குன்றே! நின்நாள் ஒன்று
காசினியில் திங்களதாய்த் திங்க ளொன்றே
எண்ணூர்ந்த ஆண்டாக ஆண்டொன் றேதான்
இசைமிக்க ஊழியதாய் இனிது வாழ்க.

என்றும் உங்கள்,

காரைக்குடி,
விளம்பி-ஐப்பசி-கரு
31—10—58

**ஹிந்து மதாபிமான சங்க,**
**ராய.சொ. மணிவிழாக் குழுவினர்.**